*Kumaraṉ*

*Āram 2, muttu 17*

*December 17, 1924*

Record no. 313

உ
Registered No. M. 1823. சிவமயம். "KUMARAN" Karaikudi.




"என்கடன் பணிசெய்து கிடப்பதே."
(வாரப் பதிப்பு.)
புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.
"ஆலயந் தொழுவது சாலவு நன்று." "திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம். உ } காரைக்குடி, ரக்தாக்ஷிஸு மார்கழிமீ ௩உ (17-12-24) { முத்து ௧௭

# இருவகை வளர்ப்பு.

நமது நாட்டில் பெண்மக்கள் பிள்ளை வேண்டுமென்று அலைந்து திரிகின்றனர். மக்களது இல்வாழ்க்கையின் பயனாக விருப்பது நல்ல பிள்ளைப் பேறுகுமென்பது யாரும் ஒப்ப முடிந்த முடிபேயாகும். குழந்தையை அடைவதற்கு மக்கள் செய்யும் முயற்சி யெண்ணில. அப்படிப் பலவகைத் தவமியற்றிப் பெறும் மக்களை யெப்படி வளர்க்கிறார்க ளென்பதை நோக்கின் வருத்தமே உண்டாகின்றது.

*           *

பிள்ளைகளை வளர்ப்பதில் இரண்டு விஷயங்கள் கவனிக்கப் பெறுதல் வேண்டும். ஒன்று அக வளர்ச்சி; மற்றொன்று புற வளர்ச்சி யாகும். உடலும் அறிவும் வளர்ச்சியுற்றாலன்றிக் குழந்தை நன்னிலையடைய முடியாது. இதுகாலை நமது பெண் மக்கள் பிள்ளையைப் பெறுதற்குப் பெரும்பாடு படுகின்றனர். பெற்றெடுத்த பின்னர் அதன் உடலை வளர்ப்பதிலேயே அவர்கள்நோக்கம் செல்கின்றது. பிள்ளைகளின் உடல் வளர்ச்சியிலும் பிற்காலத்தில் அவ்வுடல் பயன்படுநெறியில் வளர்க்கப்படவில்லை. எதையாவது போட்டு வயிற்றை நிரப்பி உருவைக் கட்டை மாதிரி உடல்பருத்தாற் போதுமென்று கருதுவது அறிவுடைமையாகாது. உடலை வளர்ப்பது எதற்காக என்ற உணர்ச்சி நமதுபெண்மக்கட்கு உண்டாவதே யில்லை.

*           *

இம்மைக்கும் மறுமைக்கும் பயன்படத்தக்க அரும்பெருந்தொண்டிற்கு உபயோகப்படுமாறு இளங் குழவிகளின் உடல் வளர்க்கப்பெறுதல்வேண்டும். அதற்கு வேண்டிய ஆகாரம் தேகாப்பியாசம் முதலியன கவனிக்கப் படுதல் வேண்டும். நமது நாட்டுப் பெண் மக்கள் இவற்றைக் கவனிக்கின்றனரோ? இல்லை. இல்லை,

*           *

சில பெண்மக்கள் ஆகாரத்தின் தன்மை தெரியாமலும் குழந்தையின் ஜீரண சக்தி தெரியாமலும் கண்டபடியாக உணவைத் திணித்து விடுகின்றனர். இது காரணமாக அருங் குழந்தைகள் பல நோய் வாய்ப்பட்டு, சந்தோஷ மிழந்து தம் வாழ்க்கை முற்றும் வீணுகிக் கழிகின்றன. குழந்தைகளின் உடலானது பூரண வளர்ச்சியைப் பிற்காலத்தில் தரும்படியான பக்குவத்துடன் பாதுகாக்கப் படாமலே பெரும்பாலும் போவதை நாம் பார்க்கிறோம். இதற்குக் காரணம் பெண்மக்கள்போதியபயிற்சி பெறாமையேயாகும்.

*           *

உலக வாழ்க்கைக்கு உடல் வளர்ச்சி மட்டும் போதியதாகு மென்ற தப்பெண்ணம் பெண் மக்களிடையில் நிறைந்திருப்பது சமூகத்தின் துரதிருஷ்டமேயன்றோ? உடல் வளர்ச்சியைவிட உயிர் வளர்ச்சியாகிய அறிவு வளர்ச்சியே மக்களது வாழ்வுக்கின்றியமையாததாகு மென்ற உணர்வு குன்றிவருகிறது. அறிவு வளர்ச்சியுடையும் பொருட்டே உடலானது தேவையிருக்கிற-தென்பதைப் பலர் அறியாமலேயிருக்கின்றனர். அறிவு வளர்க்கப் பெறாமல் உடல் மட்டும் வளர்க்கப் பெறுங் குழந்தைகள் உலகிற்காவது தனக்காவதுஉபயோகமின்றிச் சுயநலப் பேயின் வாயிலகப்பட்டு அழுகல் வாழ்க்கை வாழ்ந்து இறந்தொழிந்து போகின்றன. நாற்பது ஐம்பது வருஷ வளர்ச்சியுடைய உடலைப்பெற்றிருப்பவருள்ளும்சிறு குழந்தைக்குள்ள அறிவு கூட நிரம்பப் பெறாத பலரைக் காணலாம். காரண மென்னை? அவரது உடல் மட்டும் கவனித்துவளர்க்கப்பட்டிருக்கிறது; அறிவு கவனிக்கப் படவில்லை.

ததுந்த வழியில் முயற்சி செய்யாத பெண் மக்கள் மீது குறை கூறுவதால் மட்டும் பயனேற்படாதன்றோ? தற்காலப்பெண் மக்கட்குப் போதிய அறிவு புகட்டப்படவில்லை. அறிவென்று ஒரு பொருளானது தங்கள் குழந்தைக்கு உண்டு என்ற விஷயமே பல பெண் மக்கட்குத் தெரியவில்லை. உடல் மட்டும் தெரிகிறது. ஆகவே உடலை வளர்ப்பதில் அவர்கள் பெரு முயற்சி செய்கின்றனர். அறிவொன்றுண்டு; அதன் வளர்ச்சியிக அவசியமாகும்; அவ்வறிவின் வளர்ச்சிக்காகவே உடல் வளர்க்கப்படுகிறதுஎன்ற உண்மை பெண்மக்கட்கு விளங்குமாறு செய்தல் வேண்டும்.

*           *

அறிவு வளர்ச்சியில் கண்ணோட்டம் செலுத்தப்படாதவரையில் மக்கள் அரும் பெருங்காரியங்களைச் செய்ய முடியாது. அறிவு வளர்ச்சியில் நாட்டஞ் செலுத்தாத சமூகம் நல்வாழ்க்கை பெறுதல் முடியாத காரியமாகும். பெண்மக்கட்குப்போதிய அறிவு புகட்டப் பெறாத வரையில் குழந்தைகளின் அறிவு வளர்ச்சி குன்றித்தான் நிற்கும். ஆகவே சமூக நன்மையைநாடும் ஒவ்வொருவரும் பெண் மக்களை நன்னிலைக்குக் கொண்டுவர முயல வேண்டும். நமது குழந்தைகளின் உடல் வளர்ச்சியையும் ஒருங்கே பேணிவரும்படியான மார்க்கங்களைக் கையாடுதற்கு வேண்டுவன புரிதல் வேண்டும்.

*           *

சமூக வளர்ச்சியிற் கண்ணுள்ள அன்பர்கள் எதிர்காலத்தில் சமூகத்தின் உறுப்பினராக வரவிருக்கிற சிறு குழந்தைகளைச் செவ்வையாக வளர்க்குமாறு செய்யவேண்டுவது மிக அவசியமாகு மன்றோ? குழந்தைகளைத் திருத்துவது அவற்றின் தாய்மார்கட்கே எளிதாதலின், தாய்மார்களின் எண்ணத்தை நல்வழியில் திருப்புதற்கு வேண்டிய வேலைகள் செய்யப்பெறுதல் அவசியமாகும். தாய்மார்களின் அறிவு வளர்ச்சியுறுமானால், பிள்ளைகளின் அறிவை அவர்களே வளர்ச்சியுறச் செய்வரென்று கூறவேண்டுவதில்லை.

## சீனாவின் வருங்கால நிலை.

ஜெர்மன் புரொபஸர் எமில் லெடரர்என்பவர் 'பிராங்க்பூடர் ஸீடங்' என்னும்பத்திரிகையில்இனி மாறுதலடையப் போகும் சீனாவைப்பற்றி ருசிகரமான வியாசம்ஒன்றுஎழுதியுள்ளார். அதன் சாரமாவது:—

சீனா ஓர் குடியேற்ற நாடன்று; அது பூர்ண சுதந்திரமடைந்த குடியரசாக்ஷி பெற்ற நாடு. இதை யறியாது, பல மதிகமாயுள்ள தேசங்கள் சீனாவை, துருக்கியைப் போலவோ அன்றி வேறொரு சிறிய தேசமெனவோ கருதுகின்றனர். சீனாவில் ஏற்பட்ட அரசியல் மாறுதலி லிருந்தும், ஜெர்மனி மகா யுத்தத்தில் தோற்றுப் போனதிலிருந்தும், நேசக் கட்சியாரை ஸோவியத் ருஷ்யா வெற்றியுடன் எதிர்த்து நின்றதி லிருந்தும், சீனர் மேலைத் தேசத்தினர் பேரில் வைத்திருந்த மதிப்புச் சிதைந்து விட்டது. மகா யுத்தத்தில் சீனா ஜெர்மனிக்கும் அவர்களுடைய நேசக் கட்சியாருக்கும் விரோதமாக நின்று எதிர்த்து யுத்தம் செய்தது. ஆதலால், அதற்கு தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளக் கூடிய சக்தி கிடையாதென்று நினைக்கக் கூடாது. சீனா மனது வைத்தால் அது அந்நிய நாடுகளுக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுத்து விடும். இக்காரியத்தை வெகுசீக்கிரத்திலேயே சீனா முடித்து விடும் என்று நான் சொல்லவில்லை. சீனா வெளிநாடுகளுக்குக்கொடுக்க வேண்டிய கடனைச் செலுத்திவிடுமேயாகில், அந்நாட்டின் செல்வத்தின் பேரிலுள்ள அந்நிய நாட்டாதிக்கம் ஒழிந்து விடும். அப்பொழுது ஐரோப்பாவும் அமெரிக்காவும் என்ன செய்யும்? ஸதா கலகம் செய்துக் கொண்டிருக்கும் இந்தியாவினிடமும் ஆசியாவை விட்டு மேலைத் தேசத்தினரைத் துரத்தச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கும் ஜப்பானிடத்திலும், சீனாவுடன் நேசமாகவிருக்க விருப்பங்கொண்ட ருஷியா விடத்திலும், இனி ஐரோப்பா அமெரிக்காவினுடைய தந்திரங்கள், முகஸ்துதி, மிருகபலம் ஆகியவைகள் ஒன்றும் பலிக்காது. இத்தனை தேசங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து விட்டால், ஐரோப்பா, அமெரிக்கா இவைகளின் பலம் எந்தமூலை! சீனா சுதந்திரத்தை அடைவதற்கு, அத்தேசம் அதை விரும்ப வேண்டியது தான் தாமதம். ஜப்பான் தேசத்தினர் மேற்குத் தேசத்தினரின் வழிகள், அவர்களுடைய அதிகாரம், பள்ளிக்கூடங்கள் சேனையைப் பழக்கு முறை, கப்பற்படை ஆகியவைகளை அவலம்பித்து அம்மேலைத்தேசத்தினர் தங்களைத் தொந்திரவு செய்யா வண்ணம் தங்களைக்காப்பாற்றிக் கொண்டுவந்தனர். சீனாவோ இது வரை அம்மாதிரியான வழியைப் பற்றவில்லை. இனிமேலும் அங்ஙனம் செய்யாது, அது தன்னுடைய கைத்தொழிலையும், பொருளாதார நிலைமையையும் விருத்தி செய்து அந்நிய நாடுகளின் பிடுங்கல்களிலிருந்து விடுபட்டு விடும். சீனாவின் உண்மை நிலைமையை அமெரிக்கா நன்கு அறிந்திருக்கின்றது. இவ்விரண்டு தேசங்களுக்கும் வெகு வருஷங்களாக இருந்து வந்த சம்பந்தம் அரை குறையே யாகும். சமீபத்தில் அமெரிக்காவில் உற்பத்தி செய்யப்படும் சாமான்கள் யாவும் அந்நாட்டிலேயே செலவழியாமல் போன பிற்பாடு தான், அது சீனாவுடன் சம்பந்தம் செய்து கொண்டது. இப்பொழுது இவ்விரு நாடுகளுக்கும் வியாபாரம் செழிப்பாக நடந்து வருகிறது. அமெரிக்கா வியாபாரம் விருத்தியடைவதற்கு, நேர்வழிகளில் எவ்வளவு தூரம் பிரயத்தினம் செய்கிறதோ அவ்வளவு பிரயத்தினத்தைத் தந்திரத்தாலும் உபயோகித்து வருகிறது. உதாரணமாக, அத்தேசம் சீனாவில் வியாபாரம் செய்வதற்கு எவ்வளவு பணம் போட்டிருக்கிறதோ, அவ்வளவு பணத்தை சீனாவில் உயர்தரப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்துவதற்காகவும், மதபோதனை செய்வதற்காகவும் செலவழித் திருக்கிறது. இங்ஙனம் செலவழித்ததின் கருத்து யாதெனில், ஷை உயர்தரப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவர்கள் மனதில் அமெரிக்க சாமான்கள் மிக்க அவசியம் என்ற எண்ணத்தைப் பதியவைப்பதேயாம். சுருங்கக் கூறுமிடத்து, அமெரிக்கர் சீனர்களைக் கொண்டே அமெரிக்க சாமான்களை வாங்கும்படி செய்கின்றனர் எனக் கூறலாம். வியாபாரத்தை விருத்திசெய்ய இதுவுமோர் நல்ல வழிதான். சீனாவில் அமெரிக்கர்கள் எவ்விதமான நோக்கங்கொண்டு வேலைசெய்கின்றனரோ, அதே நோக்கங்கொண்டுதான் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஆங்கிலக்கல்வியை இந்தியாவில் விருத்திசெய்து வருகின்றனர். மேஜர் பாஸ்எழுதியுள்ள 'கிழக்கிந்தியக் கம்பெனியார் இருந்தபொழுது இந்தியாவின் கல்வி' என்ற புஸ்தகத்தைப் படித்துள்ளவர்கள் இந்தியாவில் ஆங்கிலக் கல்வி புகுத்தப்பட்டதின் நோக்கங்களில் பிரிட்டிஷ் வியாபாரத்தை விருத்தி செய்வதொன்று என்பதை அறிவர்.

விவேகபாநு.

## தேயிலையும் காப்பியும்.

பழஞ்சிறப்புடைய நமது நாடு நவீன நாகரிக மடைந்து விட்டதென்று கொண்டாடப்படும் இக்காலத்தில் தேத்தண்ணீரும் காப்பியும் நாகரீகச் சின்னங்களாகக் கொள்ளப்படுகின்றன. தேத்தண்ணீரும் காப்பியும் பானம் பண்ணாதவர்கள் நாட்டுப்புறத்தார்களென்று கருதப்படுகிறார்கள். காலையில் தூங்கி விழித்தவுடன் ஒவ்வொரு இல்லத்திலும் ஆடவரும் அரிவையரும் கவனித்துவருகிற முதல்வேலை காப்பிக்கு ஏற்பாடு செய்தலும் அதை பானம் பண்ணுதலுமேயாம். பிறகுதான் மற்ற வேலைகளில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. தங்கள் வீட்டிற்குச் சிநேகிதர்கள் அல்லது விருந்தினர்கள் வந்தால் காப்பி சாப்பிடுங்கள்என்று இனியமொழிகளால்கூறிக் கொடுத் துதவல்ஒருவித உபசாரமாகவும் வழங்கி வருகின்றது. 'நெய்யில் செய்த பக்ஷணங்கள், ரவா பக்ஷணங்கள்' என்று வர்ணங்களால் வரையப்பட்டுப் பார்ப்பவர் கண்களைக் கவர்ந்து மனதைக் கலக்கி பணத்தைப்பறிக்கும் விநோத விநோதமான பலகைகள் தொங்கவிடப் பட்டிருக்கும் காப்பிக் கிளப்புகளெனப்படும் கடைத் தெருக்களில் சென்றால், 'லிப்டன் டீயை உபயோகியுங்க'ளென்று வரையப் பட்ட அட்டைக்காகிதங்கள் ஒவ்வொரு கடையிலும் காற்றினால் மொத்துண்டு அசைந்தாடுவது 'வாருங்கள்! வந்தென்னைக் கொள்ளுங்கள்' என்று சொல்வதைப் போலிருக்கின்றது. டவுண்களில் சுண்ணாம்படிக்கப் பட்ட சுவர்களிலெல்லாம் 'சூடானதேத்தண்ணீர் சோர்வை நீக்குவது; உற்சாகப்படுத்துவது; காலணாவுக்கு இரண்டு கோப்பை செய்யலாம்' என்று வரையப்பட் டிருப்பதை நண்பர்கள் நன்குணர்ந் திருக்கலாம். தவிர மணச் சடங்குகளிலும் பிணச்சடங்குகளிலும் காப்பி தேத் தண்ணீர் பானங்கள் நுழைந்து விட்டன. தேயிலைப் பானம் அல்லது காப்பிப் பானம் இல்லாத வீடாவது, விசேஷமாவது, ஊராவது, பட்டணமாவது கிடையாது. இவ்வாறு முழு உலகத்தையும் காப்பி என்னும் காலைப் போர்வையும் டீ என்னும் மாலைப் போர்வையும் மூடிக் கொண்டிருக்கின்றன. ஆனால் அப்பானங்களினால் மக்களுக்கு ஏதேனும் நன்மை உண்டாவென்று சிறிது ஆராய்வோமானால், நேர் விரோதமான தீமைகளையே செய்துவருகின்றன. அவைகளைப் பருகும் அந்தச் சமயங்களில் பசி யடங்குகின்றது; உற்சாகம் உண்டாகிறது; களைப்பு நீங்குகின்றது; சுறுசுறுப்புப் பிறக்கின்றது. என்றாலும் நாட் செலச்செலச் சரீர சுகத்தில் பலவித கெடுதிகளை உண்டாக்கி விடுகின்றது. சரீர சுகத்திற்கு விரோதமான பானமாவது அல்லது ஆகாரமாவது தெய்வாமிர்தமா யிருந்தாலும் அதைக் கனவிலும் நினைத்தல் கூடாது என்பதைச் சொல்லவும் வேண்டுமா? காப்பிக் கிளப்புகளில் சென்று பானம் பண்ணுபவர்களுக்குத் தொத்து வியாதிகள் அநேகம் உண்டாகக் கூடியதாயிருக்கின்றது. சிகைக்காய்ப் பொடியைக் கலந்து விடுகிறார்கள்; அதனால்தான் நுரையும் கசப்பும் அதிகமாயிருக்கிறதென்று சிலர் சொல்லிக் கொள்வதை நாம் அடிக்கடி கேள்விப் படுகிறோம். சிலர் போதை வஸ்துக்களைக் காப்பித் தேத் தண்ணீர் இவைகளில் கலந்து விடுகிறார்கள். அதனால் சிறிது மயக்கமும் ஊக்க மிகுதியும் உண்டாகின்றன வென்று பேசிக் கொள்வதையும் கேட் டிருக்கிறோம். சிலருக்குக் காப்பி பானம் செய்யாவிடில் மண்டையுடை வந்து விடுகிறது; சிலருக்குச்சோம்பல் வந்து விடுகிறது; சிலருக்குக் கைகாலசதி வந்து விடுகிறது; சிலருக்கு என்னமோ போலிருக்கிறது; சிலருக்குபுத்தி ஒன்றிலும் செல்ல வில்லை என்று பலவாறாக குறை கூறுகிறார்கள். இனிமேலாவது நம்மவர் தேத்தண்ணீர் காப்பிபானம் செய்வதை அறவே ஒழிந்து மக்கள் சரீர சுகத்திற்கு ஏதுவான பானங்களைச் செய்துவரும்படி எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

பொது நலம் கருதுவோன்.



## கதைப் பகுதி

கூழை ரங்கன்.

(முன் தொடர்ச்சி.)

செட்டியார்:—அவர்களைப் பார்க்க முடியுமா?

ஒரு ஐயர்:—இந்தக் காடுகளைக் கடந்து போய் எப்படிப் பார்க்க முடியும்? ஆனால் நமக் கெல்லாம் பூர்வ ஜென்ம புண்ணியம் பலிதமாகிற காலம் சமீபித்து விட்டது! அவாள் இப்போது ஹாலாஸ்ய க்ஷேத்திரமாகிய மதுரைக்கு எழுந்தருளியிருக்கிறார்கள். பிரயாசைப்பட்டுச் சென்றால், நமக்கும் அதிருஷ்டமிருந்தால் கிடைக்கலாம்.

மற்றொரு ஐயர்:—இங்கு அழைத்து வந்து தரிசனம் செய்து வைக்க வேண்டியது மிக முக்கியம். பெரியவாள் திருவடி பட்டாலே இந்த ஊருக்குக் கதிமோக்ஷமுண்டு. ஏற்பாடு செய்யலாமோ? இல்லியோ?

செட்டியார்:— ஆஹா! பேஷாய்ச் செய்யலாம். அவர்களெல்லாம் இங்கு வரக் கிடைக்க வேண்டுமே? அதற்கு என்னாலாகவேண்டியதைச் செய்யத் தயார்.

முதல் ஐயர்:—அப்படியா! நாங்களென்ன, ஏழை. பிரபுக்களாலேதான் உலகம் நடக்க வேண்டியிருக்கிறது. பணம் உண்டாவதால் என்ன பிரயோசனம்? மனமல்லவா வேண்டும்? உசிதா உசிதந் தெரிந்து செலவு செய்வதல்லவோ உத்கிருஷ்டமான தர்மம்!

மற்றொரு ஐயர்:—பிரபுத்வம் இங்கேதாண்டா நான் பார்த்தேன்! அடாடா! உலகத்திலே இப்படிப்பட்ட தேவாளையும் நரரூபமாகப் பார்ப்பது மிக விசேஷம். வரட்டுமா, செட்டியாரவாள்! ஆசீர்வாதம்!

இருவருமாக புறப்பட்டார்கள். வெளியே வரும்போது தெருத் திண்ணை முகப்பு அறை யொன்றில் கிஷ்கிந்தாபுரி இருப்பதைக் கண்டார்கள். ஒரு ஐயர் அவனிடம் சென்று, "என்ன ராம! ஆசீர்வாதம்" என்றார். ராமன் சிரித்துக் கொண்டு "மலை விழுங்கி மகாதேவனா? ஆசீர்வாதத்திற்குப் பிறகு நமஸ்காரம் ஏறுமா? என்றான். அப்படியே அவனுக்கு முன்பாக ஐயர் உட்கார்ந்தார். சிறிது நேரம் ரகஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு பிரியும்போது இருவர் முகமும் சந்தோஷக் குறியையே காட்டின.

அதன்மேல் இரண்டு மூன்று நாட்கள் வரை எங்கெங்கோ சுற்றித் திரிந்து விட்டு ஐயரிருவரும் திரும்பினார்கள். அவர்கள் வருகிற சமயத்தில் பிரபு ரங்கநாதரும் அம்பலகாரக் கருப்பண்ணனும் ராமனும் இருந்தார்கள். இந்த இரண்டு பிராமணரும் உள்ளே நுழைந்தவுடன் கருப்பண்ணனும் ராமனும் "வாருங்கள்! வாருங்கள்!" என்று கூறி மிகமகிழ்வோடு வரவேற்றார்கள். ரங்கநாதரும் பெரும்பேறு பெற்றவர் போல மரியாதை செய்து வணங்கினார். இரண்டு ஐயர்களும் இடது கையைச் சிறிது தூக்கினார்கள். "வர ஒத்துக் கொண்டார்களா" என்று செட்டியார் கேட்டார். "உங்களுடைய தவமே தவம்" என்றார் மகாதேவ ஐயர். "யார்? என்ன சங்கதி?" என்றான் ராமன். குமாரவீரமலை சுவாமிகளவாள்என்றார் மற்றொரு ஐயர். "பெரிய சுவாமிகளா? மதுரைக்கு வந்திருப்பதாகப் பிரஸ்தாபம். அவர்களா? அவர்கள் மிகப் பெரியவாளல்லவா? எப்படி இங்கே வர ஒத்துக் கொண்டார்கள்" என்று அம்பலகாரர் ஆச்சரியத்தோடு கேட்டார். "நமது ரங்கநாதர் நினைத்து விட்டால் எதுதான் கிட்டாது? சிம்ம லக்ன ஜாதக மென்று கண்ணுக்குட்டி சோசியர் சொல்லி யிருக்கிறாரென்பது அம்பலத்துக்குத் தெரியாது போலிருக்கிறது" என்று ராமன் வெகு சந்தோஷமாகச் சொன்னான். மற்றொரு ஐயர், "நான் அப்பொழுதே யோசித்தேன். சுவாமிகள் சரியென்று தலை யசைக்கவே ஏதோ சங்கதி யிருக்கிறதென்று நினைத்தேன். சிம்ம லக்ன ஜாதகமா? சரி, சரி; பாடப்படிக்கப் பரத விதம் பாராட்டத், தேடச்சுகிக்கச் செலவழிக்கக்-மேடமுடன் கர்க்கடகஞ் சிம்மங் கன்னிக்கே யல்லாது மர்க்கடகத்திற்குண்டோமற்றுஎன்று பெரியார் கூறுவர். பேஷ்" என்றார். 'நெல்லுக்கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கு மாங்கே பொசியுமாம்' என்றபடி பெரியவாள் தரிசனம் நமக்கும் கிட்டுகிற தென்று மகாதேவ ஐயர் சொன்னார். "என்னென்ன ஏற்பாடு செய்ய வேண்டுமோ, அவற்றை நீங்கள் யாவரும் கலந்து யோசித்து முடிவு செய்யுங்கள்" என்று சொல்லி விட்டு அவசரமாக ரங்கநாத செட்டியார் அறையினுள்ளே சென்று அங்கிருந்த கண்ணாடிக் குவளையிலிருந்த கனமான தீர்த்தத்தை யெடுத்து உறிஞ்சிவிட்டுச் சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டு இந்திரலோகக்காட்சியில் லயித்து விட்டார்.

குமார வீரமலைசுவாமிகளை வரவேற்க வேண்டிய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. அந்த ஊரிலுள்ள எல்லோருக்கும் வீதியை அலங்காரம் செய்யும்படி சொல்லிவிட்டார்கள். நல்ல ஜனங்களாகையினாலே பெரியவர் வருகிறாரென்றவுடன் வீதி யெல்லாம் பெருக்கிக் கோலமிட்டு வாழைமரம் முதலியவற்றால் அலங்காரஞ் செய்து தோரணங்கள் கட்டி அழகுபடுத்திக் கொண்டிருந்தார்கள். அங்குள்ள சிவாலயத்தின் பிரகாரத்தில் அழகான கொட்டகைகள் போட்டுச் சிர்ப் படுத்தப் பட்டிருந்தன. வீதி யெல்லாம் மேடு பள்ளமின்றிச் செப்பனிடப்பட்டன. ஜமீன்தாருக்கு ஓலை யெழுதி அங்குள்ள யானை குதிரைகள் ஓட்டி வரப்பட்டன. இதற்கிடையில் ஒரு ஐயர் மதுரைக்குச் சென்று சுவாமிகளை அழைத்து வந்து காட்டுக்கம்வாயின் கரையிலுள்ள கூரைக் கொட்டகையில் நிறுத்தி விட்டுச் செய்தி யனுப்பினார். காட்டுக் கம்வாய்க்கும் செவ்வராஜபுரத்திற்கும் சுமார் மூன்று மைல் தூரமிருக்கும். ஊர் ஜனங்கள் யாவரும் நடந்தே வந்து விட்டனர். ரங்கநாதன் செட்டியார் மட்டும் வண்டியி லேறினார். ஒரு ஐயரைக் கூட வரும்படி வேண்டினார். அதற்கு ஐயர் "நான் வண்டியில் வரலாமா? சந்நிதானத்தின் முன்னர் உடம்பினால் புரண்டல்லவா செல்ல வேண்டும். பிரபுக்களுக்குப் பாதகமில்லை. சமீபித்த வுடனே இறங்கித்தான் செல்லவேண்டும். அரை மயில் தூரத்தில் நின்றால் நாங்களும் வந்துவிடுகிறோம்" என்று சொல்லி விட்டார். அங்கு நின்ற யானை குதிரைகள், ஜமீன் பல்லக்கு, கோவிலிலுள்ள ஆல வட்டம் சுருட்டி மேளதாளங்கள் யாவற்றையும் முன்னாவிட்டு நடத்திக் கொண்டு ஐயரும் ராமனும் அம்பலகாரரும் அக்கிரஹாரப் பிராமணர்களும் மற்ற ஊரிலுள்ள ஜனங்களும் வெளியூரிலிருந்து வேடிக்கை பார்க்க வந்த ஏராளமான ஜனங்களும் புறப்பட்டார்கள். அம்பலகாரரும் ஐ

உத்திரவுப்படி சுமார் ஐந்நூறு பறையர்கள் கொம்பு தப்பு கிடுகிட்டி வாங்கா முதலிய கருவிகளுடன் வந்து சேர்ந்தார்கள். இத்தனை ஜனங்களும் ஏக தடபுடலாகப் புறப்பட்டு வருகிற வழியில் ரங்கநாதன் செட்டியாரும் சேர்ந்து கொண்டார். அவர் கையில் கிஷ்கிந்தாபுரி ராமன் ஒரு தங்கத் தாம்பாளத்தைக் கொடுத்தான். அதில் இருநூறு தங்கப்பவுன்களும், தங்கத்தாற் செய்யப்பட்ட ஆயிரத்தெட்டு மல்லிகைப் பூக்களும், இரண்டு வெள்ளித் தேங்காய்களும், இரண்டு தங்க எலுமிச்சம் பழங்களும், நூறுரூபா பெறக்கூடிய ஒரு பீதாம்பரமும் இருந்தன. இவற்றைக் கொண்டு போய்ச் சுவாமியாரின் முன்னர் வைத்து விழுந்து கும்பிட்டனர். அவர் குழைத்து வைத்த சுவர் மாதிரி மௌனமாக இருந்தார். அவர் முகத்தில் ஒரு குறியும் தோற்றவில்லை. பக்கத்திலிருந்த ஒருவர் விபூதிச் சம்புடத்தை நீட்டினர். சுவாமியார் அதிலிருந்த விபூதியைக் கை நிறைய அள்ளி மகாதேவ ஐயர் கையில் வைத்தார். அவர் 'பிரசாதம், பிரசாதம்' என்று தானும் பூசிக்கொண்டு நின்ற எல்லாருக்கும் கொடுத்தார். "சுவாமிகள் சூத்திராளுடைய நேரான சம்பந்தம் வைத்துக் கொள்ள மாட்டார்கள்; மெத்த வைதிகம்." என்று ரங்கநாத செட்டியாரிடம் சொன்னார் மலைவிழுங்கி மகாதேவய்யர். சுவாமியார் மட்டும் பல்லக்கிலும் மற்ற யாவரும் கால்நடையாகவும் மாலை ஏழு மணிக்குப் புறப்பட்டார்கள். ஏராளமான தீவர்த்திகள் கொளுத்தப்பட்டன. மத்தாப்புகளொருபுறம். வாணக்காட்சிக்கு மட்டும் அன்று ரூபா ஆயிரம் தீர்ந்தது. அன்றிரவு முதல் ஒவ்வொரு வேளையிலும் வடை பாயசத்துடன் பிராமண போஜனம் ஒரு ரூபா தக்ஷிணையோடு நடைபெற்றது. மகாதேவய்யரிடம் பொறுமைப்பட்ட சில பிராமணரும் திருப்தி யடைந்துவிட்டனர். மறுநாட் காலையில் பதினொருமணிக்கு ரங்கநாதன் செட்டியாரை அழைத்துக் கொண்டு சுவாமியாருக்கு முன்னே சென்றனர். சுவாமியாரை விழுந்து கும்பிட்டார் செட்டியார். முன்போலவே விபூதி கொடுக்கப் பட்டது. சுவாமியார் (மகாதேவய்யரைப்பார்த்து), "நல்ல பாத்ரம்; மடங்கட்டலாம். இங்கேயும் ஏற்பாடு செய்யச் சொல். க்ஷேம முண்டாகும். இதைக் கொடு" என்று விபூதியை மகாதேவய்யர் கையில் கொடுத்தார். செட்டியாரை மண்டியிட்டு உட்கார வைத்தார்கள். அவர் தலையில் சில மஞ்சள் அரிசியைப் போட்டு பத்து நிமிஷம் வரை கும்பிட்டுக் கொண்டிருக்க வைத்து ஏதேதோ சமஸ்கிருதத்தில் படித்தார்கள். பிறகு விபூதியைக் கொடுத்தார்கள். வாங்கிக் கொண்டு செட்டியார் புறப்பட்டார். மகா தேவய்யரும் அரை மணி நேரங்கழித்து வீட்டுக்கு வந்துசேர்ந்தார்.

மகாதேவய்யர்:- உங்களுடைய பாக்கியமே பாக்கியம். 'நல்ல பாத்திரம்' என்று உங்களை ஆசீர்வதித்த திருக்கிறதே. என்ன அருமை! பார்த்தீர்களா? அச்சதை போடச் சொல்லி வேத புராண மந்திரங்களை ஜபிக்கச் சொன்னது யாருக்குங் கிடைக்காததாகும். இதெல்லாம் கிடக்கட்டும். அவாளுடைய வாக்கினால் 'மடங் கட்டலாம்' என்று சொன்னது லேசான காரியமா? மதுவாதி மன்னர்களுக்குங்கிடைக்குமா? 'க்ஷேமமுண்டாகு' மென்று எத்தனைகோடி கொடுத்தவரையும் இந்த பரம்பரையார் வாழ்த்தினது கிடையாது; நினைத்தது கூடக் கிடையாது. என்ன உங்களுடைய பாக்கியம்! என் உடம்பைப்பார்த்தீர்களா? மயிர்க்கூச் செறிகிறது. அதெல்லாம் இருக்கட்டும். இங்கே ஒரு அநாதை ரக்ஷகாலயம் கட்டச் சொன்னது என்ன விசேஷம். இங்கு ஒன்று ஏற்படாதிருப்பது உங்கள் பெருமைக்குச் சரி யில்லை என்று சுவாமிகள் எப்படிக் கண்டுசொல்லி விட்டார்கள்? பார்த்தீர்களா?

அம்பலகாரர்:— அதிலென்ன சந்தேகம்? இவ்வளவு பேச்சென்ன? சுவாமிகள் வந்தபோதே நமக்கு நல்ல காலம் என்பது தெரிந்தது தானே?

செட்டியார்:—செய்ய வேண்டியது தான். என்னவாகும்? கணக்குப் போடுங்கள்.

இந்தச்சமயத்தில் கிஷ்கிந்தாபுரி ராமன் ஒரு அழகிய கண்ணாடிக் குவளையில் நிறையப் பானகம் கொண்டு வந்து கொடுத்தான். குடித்துவிட்டுப் பிரபு ஒலுகில் சாய்ந்து கிடந்தார். மகாதேவய்யர் கணக்குப்போட வாரம்பித்தார். 'சுவாமிகளுடைய மடத்திற்கு ரூபா ஐயாயிரம். அவாள் வந்துபோகச்செலவுக்காக ரூபா ஆயிரம். உள்ளூர் மடத்துக்குக்கட்டிடம் ரூபா நாலாயிரம். பாதகாணிக்கை பவுன் இருநூறுக்கு ரூபா மூவாயிரம். மற்றபடி பிராமண போஜனம் மற்றவர் சாப்பாட்டுச் செலவு ஏனைய வகையில் ரூபா மூவாயிரம். இவ்வளவுதான்' என்று முடிவு செய்து விட்டார். இந்தப் பணங் கொடுக்கப்பட்டது. அடுத்த நாள் அஸ்திவாரக்கல் நாட்டுதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இவ் வைபவத்திற்கு யாவரையும் அழைக்க வேண்டுமென்றும், ஒரு அழைப்புப் பத்திரிகை அச்சிட வேண்டுமென்றும் முடிவு செய்தார்கள். அங்கிருந்த ஒருவருக்கும் அழைப்புப் பத்திரிகை யெழுதும் விதம் மட்டுப்படவில்லை. பஞ்சாங்கக்காரரைக் கூப்பிடலா மென்று ராமன் சொன்னான். அவருக்கு நாள் பார்க்கத் தெரியுமே தவிர இந்த வேலைக்கு அவர் உபயோக மில்லை யென்று பக்கத்தி லிருந்த ஐய ரொருவர் சொன்னார். வேறொருவரும் படித்தவர்களாகத் தட்டுப் படவில்லை. இந்தப் பேச்சு வெளித்திண்ணையிலிருந்த ஒருவருடைய காதில் விழவே அவர் தாம் எழுதித் தருவதாகச் சொன்னார். சரியென்றார்கள். பின்வருமாறு அழைப்புப் பத்திரிகை யெழுதி முடிக்கப்பட்டது:—

செல்வராஜபுர சுத்த நீர்த்தடாக உரிமையாளரும், ஹிந்து பாலிகா பாடசாலை அதிபரும், ஈச்சம்பட்டித் தாலுகா ஸ்தாபன அங்கத்தினரும், பெரிய பிரபுவும், கொடை வள்ளலுமான ஸ்ரீமாந் ரங்கநாதன் செட்டியார் அவர்களால் நூதனமாக ஏற்படுத்தப் பெறுகிற சன்யாச தர்ம ஸ்தாபன மடத்திற்கு நாளது குரோதிஹு ஆடிமீ ௨௪௳. வெள்ளிக்கிழமை காலை மூன்றே முக்கால்நாழிகைக்குசந்யாசதருமமடத்தின் சிரோரத்நம் நாலு வேத ஆறு சாஸ்திர பதினெண் புராண அறுபத்து நான்கு கலஞான சர்வ சாஸ்திர பாரங்கத பரமத சம்வாத உத்தண்ட வீரபராக்கிரம சௌரிய சாக்ஷாத் ஜகத்குரு அம்பிகா பீட பாரம்பர்ய கம்பீராசாரிய பிரஹஸ்பதி புனரவதார விசேஷ ஸ்ரீலஸ்ரீ மகாதேவகோவிந்த யதீந்திரபரமாச்சாரிய சுவாமிகளால் அஸ்திவாரம் செய்யப்படும். எல்லார் வரவும் எதிர்பார்க்கப் பெறுகிறது.

இதனை அச்சிட்டு எல்லா ஊர்கட்கும் அனுப்பி வழங்க ஏற்பாடாய் விட்டது. இம்மாதிரி அழகாக அழைப்புப் பத்திரிகை யெழுதிய வராகிய மகாகவிப் புலவருக்கு ஏதாவது உதவி செய்வதாக ராமன் வாக்களித்தான். குறித்தபடி காரியங்கள் நடைபெற்றன. ஜனங்கள் ஏராளமாக வந்திருந்தார்கள். கட்டடங் கட்டக்குறிப்பிட்டிருந்த இடத்தில் பெரிய கொத்துக்காவணம் போடப்பட்டிருந்தது (தொடரும்).



## புதிய நூல் சந்தாதார்.

நவம்பர் மாதம் ௧௫ தேதி தவணை.

அக்டோபர்மீ ௧௫௨ தவணையில் இராமநாதபுரம் ஜில்லாவிலிருந்து நூலனுப்பியவர்களின் பட்டியலைக் கார்த்திகைமீ ௪௨ பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறோம். அவர்கள் முப்பதின்மரோடு இதன் கீழ்க் குறிப்பிடப்பெறும் அன்பர்களும் நவம்பர்மீ ௧௫௨ தவணையில் நூல் சந்தா அனுப்பி யிருக்கிறார்கள். விவரம் வருமாறு:—

வேந்தன்பட்டி.

௧. ஸ்ரீமாந் நா. சொ. சோமசுந்தரம் செட்டியாரவர்கள்.
௨. ,, நா. பழ. நாகப்ப செட்டியாரவர்கள்.
௩. ,, பி. எம். ஆதியப்ப செட்டியாரவர்கள்.
௪. ,, கா. இறக்குமணன் செட்டியாரவர்கள்.

தேவகோட்டை.

௫. ,, வெ. நா. ஆத. நாகப்ப செட்டியாரவர்கள்.
௬. ,, பழ. முத்தையா செட்டியாரவர்கள்.

சிறுவயல்.

௭. ,, எம். பி. எம். வெள்ளையப்ப செட்டியாரவர்கள்.

புதுப்பட்டி.

௮. ,, வி. ஆர். அழகப்ப செட்டியாரவர்கள்.

செம்பொனூர்.

௯. ,, எஸ். கே. எம். எஸ். பி. காசி விசுவநாதன் செட்டியாரவர்கள்.

ஆத்தங்குடி.

௧0. ,, அ. மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள்.

கண்டரமாணிக்கம்.

௧௧. ,, கரு. கறுப்பையா செட்டியாரவர்கள்.

ஆ. தெக்கூர்.

௧௨. ,, ஆர். எம். எஸ். பி. பழனியப்ப செட்டியாரவர்கள்.

மேலைச்சிவபுரி.

௧௩. ,, எஸ். ஏ. ஆர். ஆறுமுகப்பண்டாரம் அவர்கள்.
௧௪. ,, வி. ராமசாமி சேர்வை அவர்கள்.
௧௫. ,, பி. எல். கே. ஆர். கறுப்பன் செட்டியாரவர்கள்.

சேவ்வூர்.

௧௬. ,, ஆர். எம். பி. எம். கே. ஏ. கறுப்பன் செட்டியாரவர்கள்.
௧௭. ,, பி. எல். எஸ். சொக்கலிங்க செட்டியாரவர்கள்.
௧௮. ,, என். ஏ. கே. எஸ். காசி விசுவநாதன் செட்டியாரவர்கள்.

காரைக்குடி.

௧௯. ,, வை. சுப்பிரமணிய ஐயரவர்கள், மானேஜர் தனவைசிய ஊழியன்,
௨0. ஸ்ரீமதி உடையாளாச்சி அவர்கள் (ஸ்ரீமாந் ராய. சொக்கலிங்க செட்டியாரவர்களின் மனைவியார்.)

ராஜபாளையம்.

௨௧. ஸ்ரீமதி வி. டி. வேங்கடத்தம்மாள் அவர்கள்.
௨௨. ,, இ. பு. க. மஞ்சம்மாள் அவர்கள்.
௨௩. ,, கா. வீ. அழகம்மாள் அவர்கள்.
௨௪. ஸ்ரீமாந் ஆர். நரசிம்ஹ ஐயங்கார் அவர்கள்.

பெருந்துறுணி—அபிறமம்.

௨௫. ,, ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள்.

## ஜில்லா கெஜட் சாரம்.

காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர ஹைஸ்கூலின் முதல் ௪ வகுப்புகளுக்கு அரசாங்கக் கல்வி யிலாகாவின் அங்கீகாரம் கொடுக்கும் படியும் நடை முதல் வருஷத்துக்குப் பண உதவி புரியும்படியும் இராமநாதபுரம் ஜில்லா கல்விக் கழகத்தார் சிபார்சு செய்திருக்கின்றனர். இவ்வாறே இன்னும் ௧௨ பாடசாலைகளில் ஆரம்பக் கல்வியை அங்கீகரிக்கும்படி சிபார்சு செய்திருக்கின்றனர். எட்டுப் பாடசாலைகள் மூடப்பட்டன.

௧௯௨௩-௨௪-ம் ஆண்டில் ஜில்லா முழுவதும் ஆரம்பக் கல்விக்குச் சர்க்கார் பண உதவியாக ரூ ௧௩0000 கேட்கப்பட்டது. ஆனால் ரூ ௧௨௧௨௫௬ தான் அநுமதிக்கப் பட்டது. இதனால் இவ்வருடத்தில் கொடுபட வேண்டிய பண உதவியில் சிறிது குறைய நேர்ந்தது.

௧௯௨௪ அக்டோபர் முதல் ஒரு வருஷத்துக்குக் கள்ளுக் குத்தகை எடுத்தவர்களின் ஜாப்தா பிரசுரமாகி யிருக்கிறது. சிவகங்கைத் தாலுகாவில் ௮௧ கடைகள் மாதாந்தர மொத்தத் தொகை ரூ௬௯௩௫க்கும், திருப்பத்தூர் தாலுகாவில் ௭௮ கடைகள் ரூ ௭௭௪௫க்கும் திருவாடானைத் தாலுகாவில் ௯௨ கடைகள் ரூ ௨௯௬௯க்கும் ஏலம் போயின. திருவாடானை தாலுகாவில் தேவகோட்டைக் கடை ௬௧0 ரூபாவுக்கும் இராவுசேரிக் கடை ரூ ௫௫0க்கும் ஏலம் போயின. மற்ற ௧0 கடைகளும் நூற்றுக்கு உட்பட்ட தொகைகளுக்கே ஏலம் எடுக்கப்பட்டன.

## ஸிவில் நீதிமன்றங்கள்.

சென்னை மாகாணத்தில் ௧௯௨௩-ல் ஸிவில் நீதிமன்றங்களைப்பற்றிய விஸ்தாரமான அறிக்கை சென்ற மாதம் வெளியாகி யிருக்கிறது. மொத்தம் இம் மாகாணத்தில் சென்னை உயர்தர நீதிமன்றமும் ஸ்மால்காஸ் கோர்ட்டு ஒன்றும், நகர ஸிவில் கோர்ட்டொன்றும் தவிர ௨௭ ஜில்லா நீதிமன்றங்களும், ௪௧ சப் கோர்ட்டுகளும், ௨ விசேஷ ஸ்மால்காஸ் கோர்ட்டுகளும், ௧௭௯ டிஸ்டிரிக்ட் முன்சீப் கோர்ட்டுகளும் ௧௨௭ ரிவினியூ கோர்ட்டுகளும் வருடக் கடைசியில் இருந்தன. இவற்றை யல்லாது ௬௫௧௩ கிராமக்கோர்ட்டுகளும் ௨0௧௪ பஞ்சாயத்து சபைகளுமிருந்தன. இவற்றில் மொத்தம் ௫௫௧௩௭௪-வழக்குகள்பதிவு செய்யப்பட்டன, அதாவது இம் மாகாணத்து ஜனத் தொகையில் ௭௭-பேருக்கு ஒரு வழக்கு வீதமாகிறது. இவ் வழக்குகளின் சராசரிமதிப்பு ௩௩௧ ரூபா யாகிறது. இவற்றிலும் ௨0-ரூபாய்க்குள்பட்ட மதிப்புள்ள வழக்குகள் நூற்றுக்கு ௨௮.௬௬ வீதமாகிறது.

பழய கிராமக் கோர்ட்டுகளில் பதிவு செய்யப்பட்ட வழக்குகளின் தொகை இம் மாகாணம் முழுவதுக்கும் ௮௮௧0௬-ஆகும். பஞ்சாயத்து மன்றங்களில் பதிவு செய்யப்பட்ட வழக்குகளோ ௧௩௯௩0-ஆகின்றது. பொதுவாகப் பார்க்குங்கால், பஞ்சாயத்து மன்றங்கள் திருப்திகரமாக வேலை செய்கின்றன வென்று கூறலாம். நீதி தாமதப் பரிசீலனைக் கமிட்டியாரின் முன் பலர் கொடுத்த சாட்சியத்தில் பஞ்சாயத்து மன்றங்களை ஒவ்வொரு கிராமத்துக்கும் ஏற்படுத்தி அவற்றுக்கு ஸ்தல சம்பந்தப்பட்ட வரையில் சகலவிதமான அதிகாரமும் பொறுப்பும் கொடுக்கவேண்டுமென வற்புறுத்தியிருக்கின்றனர். கிராமக்கோர்ட்டுகளும் டிஸ்டிரிக் முன்சீப் கோர்ட்டுகளும் இருக்கவேண்டியது அநாவசியம். ௫00 ரூபாவுக்கு மேற்பட்ட சகல ஸிவில் வழக்குகளும் சப் கோர்ட்டுகளில் விசாரித்துத் தீர்ப்பு செய்யப்படலாம். ஜில்லா நீதிமன்றங்கள் பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் சப்கோர்ட்டுகளின் தீர்ப்புகளின்மேல் அப்பீல்களையும் கொலை கொள்ளை முதலிய பெருங்குற்றங்களையும் விசாரிக்கலாம். இவ்விதம் ஏற்பாடு செய்தால் ஏழைய வியவசாயிகளின் பணம் வீணே வக்கீல்களுக்கும் ஸ்டாம்பு விற்பவர்களுக்கும் தரகர்களும் சாட்சிக்காரருக்கும் வக்கீல்குமாஸ்தாக்களுக்கும் ரயிலுக்கும் மோட்டாருக்கும் பங்கிடப்படாமலிருக்கும். அதிகார வர்க்கம் இந்த நன்மையான சீர்திருத்தத்தைச் செய்ய இணங்குமா?

இராமநாதபுரம் ஜில்லாவில் மதுரையிலுள்ள ஜில்லா நீதிமன்றத்தைத் தவிர ஐந்து சப்கோர்ட்டுகளும் ௯ முன்சீப்கோர்ட்டுகளும் ௨௫௪ கிராமக்கோர்ட்டுகளும் ௯௫ பஞ்சாயத்து மன்றங்களும் ௧௯௨௩-ம் ஆண்டிறுதியிலிருந்தன. தேவகோட்டையில் சென்றவருடம் தான் தற்காலத்துக்கென ஒரு சப்கோர்ட்டு ஏற்பட்டது. சென்றவருடத்தில் கிராமக் கோர்ட்டுகளில் விசாரணைக்கு வந்த வழக்குகளின் தொகை முன் வருஷத்து பாக்கியும் சேர்த்து ௨௨00; இவற்றில் ௨0௫௮ வழக்குகள் முடிவு செய்யப்பட்டன. பஞ்சாயத்து மன்றங்களில் விசாரணைக்கு வந்த வழக்குகள் ௭0௮௮; இவற்றில் ௬௧௩௬ வழக்குகள் முடிவு பெற்றன.

## நாட்டு வைத்திய கல்விச்சாலை.

சென்னை யர்சாங்கத்தார் புதிதாக ஏற்படுத்தியுள்ள நாட்டு வைத்தியக் கல்விச் சாலையில் ஜனவரி ௬-ம் தேதி முதல் வேலை யாரம்பிக்கப் படுமாம். ஆயுர்வேத, சித்த, யூனானி ஆகிய மூன்று முறைகளுக்கும் முறையே ௬0, ௩0, ௩0 வித்தியார்த்திகள் சேர்த்துக்கொள்ளப்படுவார்.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
 வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
 தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
 கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
 தவர்க்கொரு தாழ்வில்லையே.

—அருணகிரிநாதர்.

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி ௵ மார்கழி ௩௨.

## சீர்திருத்த முயற்சி.

நமது சமூகத்திலுள்ள குறைபாடுகளைத் திருத்தஞ் செய்த லவசியமென்பதை ஆண் பெண் அடங்க எவரும் மறுக்க வில்லை. ஆனால் எந்த வழியில் எப்படித் திருத்துவதென்பதைப் பற்றி இது போது முடிவுகட்ட முடியாதிருக்கிறது. சீர் திருத்தம் பெறவேண்டியிருக்கிற சமூகத்தில் உதித்துள்ள எவரும் இம் மாதிரியான நிலையில் தான் இருக்க முடியும். ஒருவர் ஒரு திருத்தவழியைக் கூறினால் மற்றவர் தயாராக விருந்து மறுத்தல் இயல்பே யாகும். அதிலும் ஒரு வழியில் சென்று அவ்வழியானது இடையில் மறிக்கப் பெற்றுத் தயங்கும்போது எவர் சொல்லும் யோஜனையும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இருப்பதில்லை. ஆகவே எல்லாரும் ஒப்புக்கொள்ள வேண்டு மென்று எதிர்பார்ப்பது அனுவசியமே யாகும். இதுகாலை தொண்ணூற்றூர்க்கூட்டங் கூட்டவேண்டுவதன்றி மற்றவைகளால் பயனேற்படாதென்று நாம் கூறுகிறோம். சில அன்பர் அது வீண்வேலை யென்கின்றனர். அது வீண் வேலையா இல்லையா வென்பது பின்னால் தெரிய வேண்டும். அல்லது இதையல்லாத வேறொரு முயற்சி பெருவெற்றியைத் தரவேண்டும். இன்றைக்கு இந்த முயற்சிதான் வெற்றியை அளிக்குமென்று துணிந்து கூறுவார் இல்லை யென்றே நாம்கருதுகிறோம். எமது நேயர்களும் பிறரும் கூறக்கூடிய சீர்திருத்தவழிகள் மூன்றாகும். ஒன்று வேறு ஜாதியிற் பெண் ணெடுத்தல்; மற்றொன்று கான்பரன்ஸ் முறையில் சமூகக் கூட்டத்தைக்கூட்டல்; பிறிதொன்று பழைய முறையிற் கூட்டங் கூட்டல். இம் மூன்றுள் வேறொரு சமூகத்திலிருந்து பெண்ணெடுப்பதற்கு மணமக்கள் கிடைக்க வில்லையென்று நாம் கூற வேண்டிய தில்லை. தொண்ணூற்றூர்க் கூட்டம் இடை மறிக்கப் பட்டதுபோலவே இம்முயற்சியும் வெற்றி யளியாது தடைப்பட்டுவிட்டது. மீண்டும் அதனைச் செய்யவேண்டு மென்று இப்போது கூறுவது பயனுடைய தாகுமென்றுவது நியாயமுடையதாகு மென்றுவது நமக்குத் தோற்றவில்லை. ஏனையநண்பர்களுங்கூறத் துணியார். இரண்டாவதான கான்பரன்ஸ் முறையிற் கூடுங் கூட்டத்தில் நமக்கு மாறுபாடான அபிப்பிராயங்கிடையாது. கான்பரன்ஸ் முறையிற் சமூகக்கூட்டத்தைக் கூட்டவேண்டு மென்பதற்குப் பொருள், வந்திருப்பவர்களை வைத்துக் கொண்டு மெஜாரிடியில் தீர்மானங்களைச் செய்ய வேண்டு மென்பதாகும். இம்முறை நடத்துவதற்கு மிகச் சௌகர்யமாக விருக்குமென்பதுண்மையே யாகும். ஆனால் இம்மாதிரியான கூட்டத்திற்குச் செல்வாக்குள்ள யாவரும் வர மாட்டார்கள். சட்டப்படி அவர்கள் வரத்தானே வேண்டு மென்று நமது அன்பர்கள் கூற மாட்டார்களென்றே நினைக்கிறோம். இக்கூட்டத்திற்குத் தலைவ ரொருவரை வைத்துப் பேசுபவர் எழுந்து நின்று பேச வேண்டி நேரும். நமது சமூகத்திலுள்ள பெரியவர்களில் இரண்டொருவரும் சீர் திருத்த நோக்கங் கொண்ட வாலிபர் பலரும் நின்று பேசும் ஆற்றலுடையவராவர். இம்முறையிற் கூடுகிற கூட்டத்தில் நின்று பேசுபவர்க்கே ஆதிக்கம் அதிக மிருக்கு மென்று மற்றவர் கருதுவதால் அவர்கள் இக்கூட்டத்திற் கலக்க விரும்புகிறார்களில்லை. இம்மாதிரியான முறையைச் சமூக மக்களில் பெரும்பாலார் விரும்ப வில்லை. வாலிபர்களே இம்முறையை விரும்புகின்றனர். நவீன முறையை நம்பி ஏனையோர்களைப் புறக்கணித்து விட்டுக் கூட்டத்தைக் கூட்டுவதால் பெரும் பயன் விளையா தென்பது நமது கருத்தாகும். சமூகத்தின் பொதுக் கூட்டமானது கூடுகிற போதே பகுப்பாகக் கூடுமானால் அதனால் செய்யப்படுகிற தீர்மானங்கள் எவ்வளவு தூரம் பயன்பட முடியு மென்பது யோசிக்கத்தக்கதாகும். இம்முறையில் அனுபவமின்மையாலாவது யோசிக்குந்திறமை யில்லாமையாலாவது நாம் கூறவில்லை. முதலாவது வாலிபர் மகா நாட்டின் தலை சிறந்த அனுபவங் காரணமாக ஆழ்ந்து யோசித்தே, இம்முறை இதுபோழ்து பயன்படாதென்று கூற விரும்புகிறோம். வேறு குலத்தில் பெண்ணெடுத்தல், கான்பரன்ஸ் முறையில் கூட்டம் நடத்தல், பழைய முறையில் கூட்டத்தை நடத்தல் ஆகிய மூன்று முயற்சிகளும் செய்தாய் விட்டன. மூன்றும் வெற்றியை அளிக்கவில்லை யென்று கண்டோம். இம் மூன்றையும் விட வேறு மாதிரியான பயன்தரும் முயற்சி யுண்டாவென்பது யோசிக்கத் தக்கதாகும். அப்படி யொன்று கிடைக்க வில்லை யாயின், செய்யக்கிடப்பதென்னை? இம்முறையினுள் ஒன்றின் வழிச் செல்ல வேண்டியதே முறையாகும். வேறு குலத்தில் பெண்ணெடுத்தல் கான்பரன்ஸ் முறையில் கூட்டங் கூட்டல் ஆகிய இரண்டும் சமூக மக்கள் யாவரும் ஒன்று சேர்ந்து செய்வதாக முடியுமா வென்பது கவனிக்கத்தக்கதன்றோ? முயற்சி பயனிழந்த காலத்தில் சமூக மக்களை ஒற்றுமைப் படுத்தி நடத்துவதே சிறப்புடையதாகும். யாவரும் ஒற்றுமைப் பட்டுச் செல்லக் கூடுமானல் அதனாற் கிடைக்கும் பயன் சொற்பமாயினும் அது பெருமை யுடையதாகு மல்லவா? பழைய முறைப்படி நடை பெறுவதில் பல கஷ்டங்களிருப்பினும் பாதகமில்லை யென்று நாம் கருதுகிறோம். பழைய முறையாயினும் பாதகமில்லை யென்று கூறுகிறோமன்றிப் பழையமுறையில்தான் கூட்ட வேண்டு மென்று கூறவில்லை யென்பதை நேயர்கள் கவனித்தல் வேண்டும். புதிய முறையில் சமூக மக்கள் எவ்வளவு தூரம் விரும்புகிறார்களோ அவ்வளவுவரை கைப்பற்றப் பின்வாங்கப் போவதில்லை. புதிய முறையைப் பலர் விரும்பாவிட்டால் பழைய முறையிலேயே நடைபெற ஏற்பாடு செய்யவேண்டு மென்று விரும்புகின்றோம். நமக்குக் கூட்டமும் காரியங்களும் முக்கியமேயன்றிப் புதுமுறை முக்கியமன்று. குறிப்பிட்ட பலர் வர விரும்பா விட்டால் சிலர்மட்டுங் கூடிப் புதிய முறையில் கூட்டத்தை நடத்துவதில் என்ன பயனை நாம் எதிர் பார்த்தல் கூடும்?



## எண்டிசைக் காட்சி.

### தமிழ்க் குருகுலம்.

இதன் நடை முறையைப்பற்றி நாம் ஒரு தலையங்கம் எழுதியிருந்ததை நேயர்கள் அறிவார்கள். ஆசிரியர் வ. வே. ஸு. ஐயரவர்க ளெழுதியுள்ள கடிதமும் நண்பர் வயிசு. எழுதிய கடிதமும் வேறு பக்கங்களில் வெளியாகி யிருக்கின்றன. அவற்றை ஊன்றிப் படிக்க வேண்டுகிறோம். ஐயரவர்கள் கடிதத்தில் "கட்டிட சௌகர்யம் ஏற்படாதவரையில் இரண்டு வகுப்புகளாக உட்கார்ந்து சாப்பிட்டார்கள்" என்று குறிப்பிடுகிறார்கள். இதை ஒருநாளும் ஏற்றுக்கொள்ள முடியாது. இது உண்மையானல், பிராமணரல்லாத குழந்தைகளும் பிராமணக் குழந்தைகளுங் கலந்து, சில வெளியிலும் சில உள்ளேயும், இருந்து உண்டிருக்கவேண்டும். ஐயரவர்கள் நல்லவர்கள். மற்றப் பார்ப்பனரின் மோதுதலுக்கு அவர்கள் அஞ்சுகிறார்களென்றேநாம் கருதுகிறோம். சமபந்தி போஜனம் இன்றியமையாத தாகுமென்று மனப்பூர்வமாக எண்ணும் ஐயரவர்கள், மகா நாடொன்றைக் கூட்டி மாறுபட்டவர்களை நம் வழிக்குத் திருப்பவேண்டு மென்று விரும்புகிறார்கள். நமது நாட்டிலுள்ள வைதிகர்களைப் பற்றி யெண்ணி இரக்கப்படவேண்டியதே நமது கடமை யென்று கூறுகிறோம். மாமூல் வைதிகர்களின் மனதில் ஆராய்ச்சி யென்பதும் இரக்கமென்பதும் அறவே கிடையாதென்று சத்தியம் செய்வோம். இவர்களைக்கூட்டிவைத்துக் கேட்பதனால் ஏனையோருக்கு ஜாதிப்பகைமை கொழுந்து விட்டெரியப் போகிறதென் றஞ்சுகிறோம். பழய மாமூல்காரர் தொகை அதிகமாக விருக்கிறதென்று ஐயரவர்கள் அஞ்சுகிறார்கள் போலும். ஆனால் அவர்கள் கடிதத்திலிருந்து மாமூல்காரர் சமபந்தி போஜனத்தை யொப்புக்கொள்ளாவிட்டால், "மாறுதல் அத்தியாவசியம் என்று நினைக்கும் சிறுபான்மையோர் தங்கள் தீர்மானத்தைப் பகவானிடம் ஒப்புவித்து ஏற்றகிரியைகளையும் சரியைகளையும் வகுத்துக்கொண்டு சிரத்தா பூர்வமாக அத்தீர்மானத்தை நிறைவேற்ற முயலவேண்டும்" என்றெழுதி யிருக்கின்றார்கள். இதனால் குறிப்பிட்ட மகா நாட்டில் சாதகமாகத் தீர்மானஞ் செய்யப்பட்டால் மிகுந்த பயன் விளைதல் கூடும். விரோதமாக நேர்ந்தால் நமது வழியில் திருத்தஞ் செய்துவிட ஆரம்பிப்போம் என்பதே ஐயரவர்களின் கருத்தென்று நினைக்கிறோம். இதுவும் பாதகமில்லை. ஐயரவர்களின் எழுத்தைக் கொண்டு பொருள் செய்வது சிரமமாக விருக்கிறது. "தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும்" என்றெழுதப் பட்டிருப்பதைக்கொண்டு விரோதமான மகா நாட்டுத் தீர்மானத்தையா அல்லது சீர்திருத்தக்காரருடைய இயற்கையான தீர்மானத்தையா வென்றறிவது சாதாரண ஜனங்கட்குக் கஷ்டமாகவே யிருக்கும். "தங்கள் தீர்மானத்தைப் பகவானிடம் ஒப்புவித்து" என்று கடிதத்திற் குறிப்பிடப் பெற்றிருப்பதற்கு "தங்கள் தீர்மானத்தை நிறைவேற்றுவதிலுண்டாகும் கஷ்டங்களைப் பகவானிடம் ஒப்புவித்து" என்பதே கருத்தாகும் என்றெண்ணுகிறோம்.

### நியாய மன்று!

ஸ்ரீமாந் ஐயரவர்கள் கடிதத்தில், கும்பலிங்கம்பிள்ளை யென்பாரிடத்தில் ஸ்ரீமாந் நாயுடு அவர்கள் "குருகுலத்தை வேரறுத்துப் போடுவதுதான் தன் உத்தேசம்" என்று கூறினாரென்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது. இம்மாதிரியாக நாயுடு அவர்கள் கூறியிருப்பின், அக்கூற்று வெறுப்பிற்குரியதாகும். கெட்டுக்கிடக்கிற தமிழ் நாட்டில் தோன்றியுள்ள ஒரு அரிய ஸ்தாபனத்தை அழித்துவிட எண்ணுவதைவிடத் திருத்திவிட எண்ணுவதே நியாயமார்குமென்று நாயுடு அவர்கட்குத் தெரிவிக்கிறோம். பல குருட்டுப் பிடிவாதங்களை அடியோடு வேரறுக்கவேண்டி யிருப்பது உண்மையே யாகும்; அதில் வீரங் காட்ட வேண்டுவதும் இன்றியமையாத தாகும். ஆனால் சேரமாதேவி குருகுலம் அந் நிலைமைக்கு வரவில்லை யென்பதைத் தமிழ் நாட்டுத் தலைவர் ஸ்ரீமாந் நாயுடு அவர்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளுதல் அவசியமாகும்.

## உள்ளூர்.

அஷ்டமிப் பிரதக்ஷிணம்:—காரைச் சிவன் கோவிலில் நாளது மார்கழி ௫-ம் தேதி வெள்ளிக்கிழமை யன்று அஷ்டமிப் பிரதக்ஷிண மஹோத்சவம் வெகு விமரிசையாய் நடைபெறும்.

உபந்யாசம்:— இன்று மாலை வாசகசாலையில் ஸ்ரீமாந் என். என். வெங்கடராமைய ரவர்களால் 'ஸ்ரீ சங்கர பகவத் பாதாள்' என்னும் விஷயத்தைப்பற்றி உபந்நியாசம் நடைபெறும்.

ஸ்ரீ சங்கராசாரியார் வருகை: சென்ற ஞாயிற்றுக்கிழமை சாமவேத பாடசாலையில் இரவு 8-மணிக்கு இவ்வூர் மகாஜனங்கள் கூடி காமகோடி பீடாதிபரின் வருகை விஷயமாய்ப் பேசினார்கள். ஆயிர ரூபாய் வரை கையெழுத்தானதாகத் தெரிவிக்கப்பட்டது. இன்னொரு வாரத்தில் வருவ்களை முடித்துவிட வேண்டுமென்றும் கோரப்பட்டது. வருகிற ஞாயிற்றுக்கிழமை மாலை நான்கு மணிக்கே மகாஜனங்கள் பாடசாலையிலேயே கூடிக் காரிய நிர்வாகங்கள் விஷயமாய் முடிவான ஏற்பாடுகள் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

சைவமகா சபை:—கார்த்திகைமாதம் ௨௯-ம் தேதி அன்று மாலை ஆறு மணிக்கு காரைக்குடி அறுபத்து மூன்று நாயன்மார்கள் குரு பூஜை மடத்தில் அநுகூல விநாயகருக்கு விசேஷ பூஜை செய்து திருவருட்பா ஓதப்பெற்ற பின் ஸ்ரீலஸ்ரீ ராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்கள் 'சைவமகா சபை'யைப் பற்றி விரிவாக உபந்யாசம் செய்தார்கள். ஸ்ரீமாந் ராம. மெ. ஞானசம்பந்தச் செட்டியாரவர்களால் 'மெய்ப்பொருள் நாயனார் சரிதமும்,' ஸ்ரீமாந் ராம. உ. இராமசாமி செட்டியாரவர்களால் 'விநாயகர் பெருமையும்,' சிதம்பரம் ஸ்ரீ மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை மாணவன் நடேசனால் 'மூர்த்தி நாயனார்' சரிதமும், ஷையூர் இராமநாதனால் 'முருக நாயனார்' சரிதமும், கூறப் பெற்றன. அதன்மேல் ஸ்ரீமாந் கா. கா. அழ. காளையப்ப செட்டியாரவர்கள் தேவாரச் சிறப்பைப் பற்றி உபந்யாசிக்கத் தேவாரப்பாகரம் சபையோர்களுக்குவழங்கப்பெற்றது. ஸ்ரீமாந் சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் வந்தனோபசாரங்கூறப் பத்துமணிக்குச் சபை இனிதுநிறைவெய்தியது.

## கப்பற்செய்தி.



'டீஸ்டா' கப்பல் மலாய் நாட்டிலிருந்து நேற்றுச் சென்னை வந்து சேர்ந்தது. ௭-தேதி ஞாயிற்றுக்கிழமை நாகையி லிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

## தந்திச்செய்தி

பினங்கு, மார்கழி கஉ

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்தாறு

| | |
|---|---|
| ஈயம் விலை | நூற்று முப்பது |
| ரப்பர் விலை | எண்பத் தேழு |

இரங்கூன், மார்கழி கஉ

| | |
|---|---|
| படகு நெல் | கஎரு—0—0 |
| ரெயில் நெல் | கஎ0—0—0 |
| ஆலை அரிசி பெரிது | சஙரு—0—0 |
| ஆலை அரிசி சின்னது | சஅரு—0—0 |
| எ ஒன் குருணை | சஉரு—0—0 |
| வெள்ளை பீன்சு | ங௬0—0—0 |
| சிவப்பு பீன்சு | ச00—0—0 |
| தங்கம் | ஙங—௬—0 |
| பவுன் விலை | கச—௬—0 |
| டாலர் | ருக—0—0 |
| வெள்ளி | எஅ—0—0 |
| தவணை வட்டி | 0—கக—௬ |

பணம் பிரியம்.

(த. வை. ஊ.)

---

### இரங்கூன், தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்.

இச் சங்கத்தார் லோக்கா நகரத்தாரவர்களின் வேண்டுகோட் கிணங்கி அவண் நடந்த இராமாயணப் பட்டாபிஷேகத்திற்குச் சென்று கச,கருஉ களில் சிவ குக தேசீய பஜனைகள் நடத்தினர். ஞாயிற்றுக் கிழமை மாலை ச-மணிக்கு மேல் பி. நா. லெ. நாராயணச்செட்டியாரவர்களின் தலைமையில், செ. இராமசாமிசெட்டியார் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்பதையும், சா. கணேசன் செட்டியார் "உயிர்க்குறுகண் செய்யாமை" என்பதையும், பெ. முருகப்ப செட்டியார் "ஆணிமாண்டவ்யர்" என்பதையும், லெ. சண. லெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் "விபூதிருத்ராக்கத்தின் மகிமை" என்பதையும், ஆரு. சோமசுந்தரச்செட்டியார் "சிபிச்சக்காவர்த்தியின் ஜீவகாருண்யம்" என்பதையும் பேசத் தலைவரவர்களின் முடிவுரையுடன் எ-மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது, மேலும் அவ்வூரில் குறைந்தது இராமாயணப் பட்டாபிஷேகத்திற்கு (மறுநாள்) ௧000 உயிர்கள் கொல்லப்படுமாம், ஆனால் இவ் வருஷம் பல மெய்யன்பர்களின் நன் முயற்சியால் சுத்த போஜனமாகவே நடந்தது போற்றத்தக்கது, ஒவ்வொரு விசேடங்களிலும் எல்லாஊர்களிலும் சுத்த போஜனமாகவே நடந்து வரும்படி சிவபெருமான் அருள் புரிவாராக.

நா, கணேசன், காரியதரிசி,

## வைசியநாட்டுச் செய்தி

### சிவநேசர் திருக்கூட்டம்.

இத் திருக்கூட்டத்தார் இரக்தாக்ஷி ஆண்டுகார்த்திகைத்திங்கள் உஉ,உங ம் நாட்களிற் கடியாபட்டியிற் கூடி ஆலய வழிபாடு செய்துகொண்டு காரைக்குடி சிவநேசச் செல்வர் ராம. சொக்கலிங்க ஐயா அவர்கள் தலைமையில் சிவநேசச் செல்வர் காரைக்குடி முத்த. லெ. சொக்கலிங்கஞ் செட்டியார் முதலாயினோர் தேவாராதி திருப்பாசுரங்களை இன்னிசையிற் பாடச் சிவநேசச் செல்வர்களான காரைக்குடி மெ. ஞானசம்பந்தச்செட்டியார், கா. கா. அள. காளையப்ப செட்டியார், சேவு. மெ. மெய்யப்பசெட்டியார், சுப்பிரமணிய சிவயோகியார், உலகன்பட்டி வை. செல்லையசெட்டியார், சி. இலக்குமணய்யா, மகிபாலன்பட்டி மு. கதிரேசன் செட்டியார் ஆகியவர்கள் சைவப் பிரசங்க மியற்றினார்கள். தலைவரவர்களின் அழகான முகவுரை முடிப்புரைகளுடன் திருக்கூட்டக் காரியதரிசியாலும் இராமச்சந்திரபுரம் சிவநேசச் செல்வர் வ. சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாராலும் வந்தனங் கூறப்பெற்று இனிது நிறைவேறியது. மார்கழி௴ உச-உரு-உசு-ம் நாட்களில் சிதம்பர க்ஷேத்திரத்தில் மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலையில் வந்து கூடி உரிய சிவத்தொண்டு புரிவார்கள்.

திருக்கூட்ட ஊழியன் இராமசாமி.

---

### கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டம்.

இத் திருக்கூட்டத்தில் நாளது கார்த்திகை௴ உ௩உ சோமவாரத் தன்று இரவு ௧0-மணிக்கு இவ்வூர் நகரப் பள்ளிக்கூடத்தில் அங்கத்தினர்களால் ஸ்ரீமாங்களான வயி. ராம. இராமசாமி செட்டியாரவர்கள் நீதிபதியாகவும் வீ. பெரி. பழ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் வாதி வக்கீலாகவும் தெ. நா. ராம. சோமசுந்தரம்செட்டியாரவர்கள் பிரதிவாதி வக்கீலாகவும் ஜீவகாருண்ய வழக்கு நடத்திக்காண்பிக்கப்பெற்றது. அவ்வமயம் நீதிபதியால் முகவுரை கூறப்பெற்றுப் பல மாணவர்களால் கடவுள் வாழ்த்தும் தேசீய கீதமும் சிவகுக பஜனைகளும் பாடப் பெற்றதோடு இடை யிடையே பல துண்டுப் பிரசுரங்களும் வாசிக்கப்பெற்றதுடன் க-மணிக்கு மங்களகரமாக நிறைவெய்தியது. ஆடவர் பெண்டிர் இரு பாலரும் ஏராளமாகக் கூடி யிருந்தனர்,

**வையாபுரி:**—இவ்வூரில் உள்ள ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்துக்கு நாளது௴ உசஉ திருக்கார்த்திகை யன்று கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டத்து அங்கத்தினர்கள் சென்று தேவார திருப்புகழ் நாம பஜனைகளோடு சுவாமி தெரிசனை செய்து கொண்டனர். அங்கு வந்திருந்த அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னதானமும் வழங்கப்பெற்றது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

### இராமநாதபுரம் ஜில்லாவில் ஆரம்பக் கல்வி.

ககூஉங-உச-ல் ஆரம்பக் கல்விச் சாலைகள் ககசகூ இருந்தன; முன் வருடத்தை விட கஙகூ பாடசாலைகள் அதிகரித்துள்ளன. கூ பள்ளிக்கூடங்கள் அரசாங்கத்தாராலும், கஎ பாடசாலைகள் நகர பரிபாலன சபையாராலும் கசு0 கல்வி நிலையங்கள் தாலுகா போர்டாராலும் நடத்தப்படுகின்றன. பொது ஜனோபகாரத்தால் நடை பெறுகின்ற கூசுங பாடசாலைகளில் அரசாங்கஉதவி பெற்றுப் பாதிரிகளால் நடை பெறுவன உசுஉம், பண உதவி பெற்ற இதர பள்ளிக்கூடங்கள் ருகங-ம் உதவி பெறாத கல்விச் சாலைகள் கஅஅம் இருந்தன. சென்ற வருடத்தில் இந்த ஜில்லாவில் மொத்தம் ருஉஙகூச பையன்கள் ஆரம்பக் கல்வி நலத்தைப் பெற்றனர்; அதாவது ஜில்லாவி லுள்ள ஆண்களின் தொகையில் நூற்றிக்கு சு. ச வீதமாகிறது. ஆனால் முன் வருடத்தைவிட பிரஸ்தாப வருடத்தில் ருசுகூக பிள்ளைகள் அதிகமாகக் கல்வி பயில முன் வந்தனர். பின்னும் நசசச தாழ்ந்த ஜாதி (பள்ளர், பறையர், சக்கிலியர்) பிள்ளைகள் கல்வி கற்று வந்தனர். பெண் பிள்ளைகளுக் கெனப் பிரத்தியேகமாக முன் வருஷத்தைப் போல் க0க பாடசாலைக ளிருந்தன. இவற்றில் க0கஅள பெண்கள் கல்வி கற்று வந்தனர். குற்றம் செய்யும் வகுப்பினராகிய கள்ளர், வலையர், குறவருடைய பிள்ளைகள் சகஎ பேர் கல்வி பயின்று வந்தனர். ஆண் பிள்ளைகளுக்கு இராப் பள்ளிக்கூடங்கள் க0சு இருந்தன. இவற்றால் பொதுவாக நன்மையே ஏற்பட்டிருக்கிறது. மொத்தம் உஅருசு உபாத்தியாயர்களில் உருசக பேர் ஆண்கள், நகரு பேர் பெண்கள். இவர்களில் முறையே கசுச பேரும் கஅஅ பேருமே போதனமுறையிற்றேர்ந்தவர்.மற்ற கஎ0ச பேரும் போதன முறை பயிலாதவராவர். இராமநாதபுரம் சிவகங்கை ஆகிய இரு தாலுகா போர்டுகளே கல்வி வரி விதித்து வருகின்றன. இந்த ஜில்லாவில் ரயில்வே வசதிக் குறைவினால் கிராம ஜனங்களுக்குள் அதிகமாகக் கல்வியைப் பரவச் செய்வது கஷ்டமாயிருக்கிறது. கிராமப்பள்ளிக்கூடங்களில் வாசிக்கும்பிள்ளைகளை ஒருநேரத்துக்குமாத்திரம் பள்ளிக்கூடத்தில்வைத்து வாசித்தல், எழுதல், கணிதம் ஆகிய மூன்று மாத்திரம் கற்பித்து மற்றொரு நேரத்தில் புலங்களில் வேலை செய்ய விட்டு விடுவது நன்மை பயக்குமா என்பதைப் பற்றிப் பரிசீலனை செய்யப் பட்டு வருகிறது.

---



### தமிழ்க் குருகுல வித்தியாலயம்.

தமிழ்க்குருகுல ஆசாரியர் பின் வருமாறு எழுதுகிறார்கள்;—

தமிழ்க்குருகுலத்தின் கல்வி விஷயமாகவும் ஆகார விஷயமாகவும் 'தமிழ்நாடு'பத்திரிகையில்முதன்முதல்வந்தவியாசத்திற்கு நான் பதில் எழுதியபிறகு தமிழ்க் குருகுலத்தைப்பற்றி இப்பத்திரிகையிலும் பிறபத்திரிகைகளிலும் பலபடியான வியாசங்களும் குறிப்புகளும் வந்துகொண் டிருக்கின்றன. இவ்விவகாரம் சகலவிதமான நோக்கு நிலைகளினின்றும் வாதிக்கப்பட்டபிறகே மறுபடி குருகுலத்தின் தற்கால முறைமையையும், அது எதிர் காலத்தில் செய்ய விருக்கும் காரியத்தையும் பற்றி எழுதவேண்டும் என நினைத்து இதுகாறும் எழுதாமல் நிறுத்தியிருந்தேன். இப்பொழுது எல்லா நோக்கு நிலைகளினின்றும் கடிதங்கள் பத்திரிகைகளில் வெளிப்பட்டு விட்டன என்று கொள்ளுகிறேன்.ஆகையால் இவைகளை எல்லாம் சிரத்தையுடனும் பொறுமையுடனும் படித்து என் மனதினுள்ளே பக்தி சிரத்தையோடு சிந்தித்துப் பார்த்து, பாரததேவிக்கும், எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு மனிதஜாதியின் இயக்கங்களை இயக்கிக் கொண்டு வருகிற தனிப்பெருங் கடவுளுக்கும் உகந்த முடிவே என் சிற்றறிவில் தோன்றவேண்டு மென்று இடைவிடாமலும் பயபக்தியோடும் பாரசக்தியைப் பிரார்த்தித்து நான் தற்போது வந்திருக்கிற முடிவைப்பற்றி ஈண்டுக் குறிப்பிடுகிறேன்.

ஸ்ரீமாந் நாயுடுவின் தர்மபுரி மஹாநாட்டு முடிவுரைக்குப் பிறகு மகா சாந்தசீலரும் தமிழ் நாட்டு மகாநாட்டின் மாஜி அக்கிராசனாதிபதியும், நாம் அறிந்த வரையில் ஜாதிவேற்றுமை யுணர்ச்சி இல்லாதவருமான ஸ்ரீமாந் வாஸுதேவையா தமது நிர்வாக அங்கத்தானத்தைக் காலிசெய்துளார். அதைப் பற்றி நாயுடு வெளிப்படுத்திய கடிதத்தை நான் டிசம்பர் ௬-ட 'ஸ்வராஜ்ஜிய' பத்திரிகையில் படிக்க நேர்ந்தது. அக் கடிதத்தில் நான் தமிழ்க் குருகுலத்தின் மீது போர் தொடங்கியதினம முதற்கொண்டு தன் நண்பர் இவ்வாறு இளம்புவார்களென்பது தான் எதிர்பார்த்ததே என்று அவர் (ஸ்ரீநாயுடு) எழுதுகிறார். தவிர பெல்காம் காங்கிரஸை ஒட்டிச் சுற்றுப் பிரயாணம் செய்துவர விரும்பிக் குருகுலத்தினின்று ஓய்வு எடுத்துக் கொண்டவரும் எனது நண்பருமான ஸ்ரீமாந் கும்பலிங்கம் பிள்ளை என்பார் ஷெ நாயுடுவைத் திண்டுக்கல்லில் கண்டு, அவருடைய கண்டனை குருகுலத்தில் தனக்குப்பிடியாத அம்சங்களைச் சீர்ப்படுத்தி அமைக்கவேண்டும் என்கிற கருத்துக் கொண்டதாயிராமல் குருகுலத்தை வேரறுக்கும்படியாக இருக்கிறதே என்றுகேட்டதற்கு, அதை வேரறுத்துப் போடுவதேதான் தன் உத்தேசம் என்றுகூறினாராம். இந்த மனநிலை இருக்கும் வரை ஸ்ரீநாயுடுவைத் திருப்தி செய்வது எனக்கு அசாத்திய மாயிருக்கும் என ஐயுறுகிறேன். அம் முயற்சியில் தற்பொழுது நான் இறங்கவும் விரும்பவில்லை. ஆனால் அவருக்கும் அவரைப் பின்பற்றுவோருக்கும் உள்ள இம் மனநிலை சீக்கிரம் மாறி இவ் விவகாரத்தை அன்புநிலையில் நின்று யோசித்துப் பார்த்து விதாயகம் தேட அவர்களும் முயலுவார்கள் என்றும் இன்னமும் எனக்கு நம்பிக்கை இல்லாமலில்லை. ஸ்ரீ நாயுடு அவர்கள் செய்யும் போரும் ஸ்ரீ கஹான்சந்திர வர்மா முதலியோரின் தூற்றல்களும் தமிழ்க் குருகுலத்தை வீழ்த்திவிட முடியாது. அது சுயமயக் கருத்துடன் நடத்தப்படாத வரையில், ஜாதிய வேற்றுமைகளை அழித்துவிட வேண்டும் என்கிற கருத்துக்கொண்டு, அக்கருத்தை நிறைவேற்றத் திரிகரண சுத்தியாய்த் தனக்கு நியாயம் என்று படுகிற வழிகள் அனைத்தாலும் பாடு பட்டுக் கொண்டும் தனக்கு இருக்கிற சௌகரிய அளவுக்கு பிரம்மசாரிகளுக்குத் தேசபக்தியும் நல்லறிவும் வளர்க்கக் கூடிய கல்வியைப் புகட்டிக் கொண்டும் வருகிற வரையில், இக்குருகுலம் அழியவே அழியாது என்ற திட நம்பிக்கை எனக்கிருக்கிறது.

இக்குருகுல வித்தியாலயம் ஓர் கல்விஸ்தாபனம். அங்கு அறிவும் தேசபக்தியும் கடவுள் உணர்ச்சியும் வளர்க்கக்கூடிய கல்வி யாதொரு பக்ஷபாதமுமின்றி எல்லோருக்கும் சரி சமமாக கொடுக்கப் படுகிறது. சீக்கிரம் போட்டோ பிடிக்கும் தொழிலும், சித்திரத் தொழிலும், தச்சுத் தொழிலும் வார்னிஷ் செய்யும் தொழிலும் ஏற்படுத்தி இதில் கற்கும் மாணவருக்கு வேறொருவரை அபேக்ஷியாமல் குறைந்தது தங்கள் காலக்ஷேபத்தைப் பார்த்துக் கொள்ளும் திறமை ஏற்படுத்தித்தர இருக்கிறோம். இதில் இரு மாணவர் தவிர மற்றெல்லோரும் சமபந்தி போஜனம் செய்ய ஆக்ஷேபியாதவர்களே. கட்டிட சௌகரியம் ஏற்படாத வரையில் மாணவர் இரண்டு வகுப்புகளாய் உட்கார்ந்து சாப்பிட்டனர். கட்டிட சௌகரியம் ஏற்பட்டது முதற்கொண்டு மேற்சொன்ன இருவர் நீங்கலாக மற்றவர் ஒரே இடத்தில் உண்கின்றனர்.

ஆனால் இது மாத்திரம் போதாது என்றும், இங்கு சேர்க்கப்படும் மாணவருக்குத் துவிஜ சம்ஸ்காரம் கொடுக்கவேண்டு மென்றும் நான் கருதிஅதற்குவேண்டிய சாஸ்திரஆதாரங்களும் சான்றோருடைய ஆதரவும் தேடி வருகிறேன். ஹரித்துவார குருகுலத்தில் துவிஜ சம்ஸ்காரம் செய்யாமல் மாணவரைச் சேர்ப்பதில்லை என்பதை ஈண்டுப் படிப்போர் நன்கு கவனிக்கும்படி வேண்டுகிறேன். இங்கு அம்முறையைக் கையாளுவதற்குச் சான்றோருடன் ஆராய்ந்து வழியையும் துறையையும் நிர்ணயிப்பதே முறை என்று நினைக்கிறேன். ஜாதியில் நிலைக்கக் கூடிய ஒரு புதிய முறையை ஏற்படுத்துவதானால் அதற்குப் பரஸ்பரம் ஆத்தியாத்ம சம்பந்தம் உள்ள ஓர் கோஷ்டியின் ஆதரவும் பலமும் அத்தியாவசியம் என்பது எனது அபிப்பிராயம். ஒரு தனி மனிதனுக்குச் சாதாரணமாக ஜாதியின் அமைப்பை மாற்ற அதிகாரம் கிடையாது. ஜாதியின் அமைப்பு கெடுக்கிறதால் அது மாற்றி அடைக்கப்பட வேண்டும் என்று ஒருவன் ஆராய்ந்து தீர்மானித்து,அவன் அபாரமான ஆத்தியாத்ம ஆற்றல் படைத்தவனா யிருந்து பலசிஷ்யர்களை ஏற்கெனவே அடைந்திருந்தானானால், அவனுடைய ஆணையின்படிநடக்க ஆயத்தமாக இருக்கும் அந்த சிஷ்ய கோடியே அவனுக்கு வேண்டிய லௌகிக பலத்தைத் தந்து அவன் விரும்பிய அமைப்புக்குஆதாரம் தரும். அவன் அத்தகைய பூரண புருஷனாக இல்லாதவனா யிருந்தால், அவன் தன்னுடைய கருத்தைப் பகிரங்கமாக வெளியிட்டுச் சான்றோரின் கூட்டம் ஒன்றை அழைத்து அவர்கள் முன்னே தன்னுடைய கருத்தைச் சொல்லி அவர்களை அக்கருத்துக்கு இணங்கச் செய்ய முயல வேண்டும். விஷயம் மாமூலுக்கு விரோதமானதால் அநேகர் ஆக்ஷேபிப்பார்கள்.மாமூல் புத்தியினால் கூறப்பட்டாலும், குதர்க்கமின்றிக் கூறப்படும் ஆக்ஷேபனைகளுக்குப் பொறுமையோடு,அன்போடு,யுக்தியோடும், சனாதனமான தர்மத்தோடும்பொருந்தும்படி, பதில் சொல்லுவதே மாறுதலுக்காகப் பாடுபடுவோரின் கடனாகும். இந்தக் கடனெல்லாம் ஆற்றின பிறகு கோஷ்டியிற் பெரும்பாலார் சம்மதம் கொடுத்தால் நினைத்த காரியம் உடனே பூரண சாதகமாகி விடுகிறது. பெரும்பாலோர் விரோதமாக விருந்தால், மாறுதல் அத்தியாவசியம் என்று நினைக்கும் சிறுபான்மையோர் தங்கள் தீர்மானத்தைப்பகவானிடம் ஒப்புவித்து ஏற்ற கிரியைகளையும் சரியைகளையும் வகுத்துக்கொண்டு சிரத்தா பூர்வமாக அத்தீர்மானத்தை நிறைவேற்ற முயல வேண்டும். இதுவே பரத்துவாஜ ஆசிரமம் செய்யவிருக்கும் முறை. மாகாண மகாநாடு திருவண்ணாமலையில் கூடி முடிந்ததும் இம்மாத ஆரம்பத்தில் நானும் ஸ்ரீமாந்களான திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரும், காவிய கண்ட கணபதி சாஸ்திரிகளும், ராய. சொக்கலிங்க செட்டியாரும் இவ்விஷயமாகக் கலந்து யோசித்ததில் பெல்காம் மகாநாடு முடிந்தவுடன் நாங்கள் நால்வரும் ஸ்ரீ ஆதிநாராயண செட்டியார் முதலிய வேறு சிலரும் சென்னையில் கூடி இவ்விவகாரத்தை நிர்ணயிப்பதற்காக ஓர் மகாநாட்டை அழைப்பதற்கு என்னென்ன செய்ய வேண்டும் என்று முன்னால் யோசித்து ஓர் முடிவுக்கு வரவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டோம். அதற்கு நான் சித்தமாக இருப்பது போலவே மற்ற மூவரும் சித்தமாக இருக்கிறார்கள் என நம்புகிறேன். பத்திராதிபர் என்கிற முறையில் ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் எழுதி யிருப்பதற்கும் மேலே நான் எழுதியிருக்கும் விஷயம் சமாதானமாகும் என நம்புகிறேன். ஆனால் எவ்வாறிருப்பினும் மேற் சொன்ன தீர்மானத்தின்படி அவர் இந்தப் பூர்வாங்கமான யோசனைக்கு வருவார் என எதிர்பார்க்கிறேன்.

தமிழ் 'ஜாதி'யில் ஜாதிப் பிரிவினை என்கிற நோய் எப்படி வந்தது என்

றும், யார் அதற்கு உத்தரவாதம் என்றும் விசாரிக்கிறதற்கும், ஒரு 'ஜாதி'யில் பிறந்தோர் மற்றொரு ஜாதியில் பிறந்தோரைத் தூற்றிக்கொண்டுபோவதற்கும், இது காலமில்லை என்றும் சந்தர்ப்பமில்லை என்றும் தோன்றுகிறது. இந்த நோய் இருக்கிறது என்பதை உணர்ந்து அதை எத்தனைச் சீக்கிரம் தீர்க்கமுடியுமோ, அத்தனைச் சீக்கிரம் தீர்த்து விடவேண்டியது தான் ஜாதியின் நன்மையை நாடுவோரின் முதல் வேலை. இந்த ஜாதிப் பிரிவினை என்கிற வைசத்தானுக்கு இப்பொழுது விவாதத்தில் புகுந்துள்ள எல்லோரும், இன்றில்லாமற் போனால் நேற்று, ஒரு வழியில்லா விட்டால் இனனொரு வழியில், அடிமைகளாக இருந்திருக்கிறோம். இன்றைக்கு அவரவர்கள் எம்மட்டுக்குத் தாங்கள் இந்த உணர்ச்சியினின்று நீங்கி யிருக்கிறார்கள் என்று அவரவர்களுக்குத் தான் தெரியும். அவரவர்களுக்குக் கூடப் பூரணமாகத் தெரிகிறது சிரமம். தவிர இன்றில்லாத உணர்ச்சி நாளைக்கு வந்து விடுவதும் இயற்கை. ஆகையால் ஜாதியினின்று இவ்வுணர்ச்சியை நீக்கி ஜாதியை ஒற்றுமைப் படுத்த விரும்புவோர் அறிவைக் கலங்கவைத்து உண்மையை உள்ளபடி உணராமற் செய்வதும், நாளுக்குநாள் வளரவேண்டிய அன்பின் வளர்ச்சியைக் கெடுப்பதும், விரும்பிய காரியத்தைச் சாதிப்பதற்கு வேண்டிய ஆற்றலை அடியோடு கெடுப்பதுமான க்ஷாத்திரத்தையும் குரோதத்தையும் பிரயாசைப்பட்டு மனதை விட்டு அகற்றி விடவேண்டும். இன்றைக்கு யாரைத் தூற்றுகிறோமோ, அவர்கள் இருக்கிற நிலைமையில் நாம் நேற்று இருந்தோம்; வேறுமாதிரி சந்தர்ப்பங்களுக்குள் நாம் அகப்பட்டுக் கொண்டிருந்தோமானால், அவர்களுடைய நிலைமையிலேயே நாம் இப்பொழுதும் இருக்கவே செய்வோம் என்றும் உணர்ந்து, இன்று வேறு உணர்ச்சி கொண்டுள்ளவர்களை நாம்வயப்படுத்த முயலுவதே முயற்சி என்றும் அம்முயற்சி அன்பினாலல்லது வேறு வழிகளால் முற்றுப்பெறாது என்றும் நிர்மாணித்து அன்புப் பிரயத்தனத்தில் இறங்குவது தான் தமிழ்நாட்டின் பிதுஅன்பு கொண்டோருக்கு அழகு என்றும் எடுத்துக் காட்டுவது தவறாகாது என்று நம்புகிறேன்.

## தமிழ் குருகுலம்.

ஸ்ரீமான் வயி.சு. ஷண்முகஞ் செட்டியார் அவர்கள் பின்வருமாறு எழுதுகிறார்கள்:—

சேரமாதேவியில் ஸ்ரீ வ. வெ. சு. ஐயரவர்களால் ஸ்தாபிக்கப் பெற்று நடந்துவரும் குருகுலத்தில் ஜாதிப் பிரிவு முறை பற்றிய தற்கால அனுஷ்டானத்தை வைத்தியர் வரதராஜுலு அவர்களும், கல்யாண சுந்தர முதலியாரவர்களும், குமரன், தனவைசிய ஊழியன் முதலிய பத்திரிகாசிரியர்களும் கண்டித்து எழுதி யிருப்பதை யாவரும் அறிவர். இவ்வாறு குருகுலத்தைக் கண்டித்து எழுதிவிடப்பெற்றது தமிழ் நாட்டின் துர்ப்பாக்கிய மாகும். நீண்ட நாளாகத் தமிழ் நாட்டுக்கு ஒரு குருகுலம் வேண்டுமென்பதில் பேரவாக் கொண்டிருந்த யான் அக்குறையை நிவர்த்தித்த பெரியார் ஸ்ரீ வ. வெ. சு. ஐயரவர்களை கார்த்திகை மீ ௨ அன்று யில் நேரிற் கண்டு இது விஷயமாகப் பேசினேன். தேச சேவையில் ஆர்வமிக்குள்ள தியாகிகள் குருகுலத்தைப்பற்றிக் கண்டிக்கும்படியான சந்தர்ப்பம் உண்டாகிவிட்ட—தமிழ் நாட்டின் துர்ப்பாக்கிய—நிலையைப் பற்றி, நான் அவர்களிடம் அளவளாவி விஸ்தாரமாகப் பேசியதில் தெரிந்து கொண்ட விஷயங்களை நமது நாட்டு மக்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். ஸ்ரீ ஐயரவர்களிடம் ஜாதி வேற்றுமை காரணமான துவேஷ உணர்ச்சி லவலேசங்கூடக் கிடையாது. அவர்கள் தற்காலமிருக்கிறபடி ஜாதி பேதங்களையொழித்து முறையான சீர் திருத்த (சம்ஸ்கார)த்தோடு எந்த விதமான பேதமுமில்லாமல் குருகுலத்தை நடத்தற்குரிய முறைகளை ஆராய்ந்து அதன்படி நடந்து ஜாதி பேதத்தை ஒழிக்கக் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கிற நிலையில் குருகுலத்தைப் பற்றி அதிருப்தியான எண்ணங்கள் ஜனங்களிடையில் பரவும்படி நேர்ந்துவிட்டது. சாஸ்திர சம்மதமானதும் அறிஞர் அநுமதிக்கக் கூடியதுமான ஒரு சீர்திருத்த (சமஸ்கார)த்தைப்பற்றித் தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருக்கிற—இன்னும் ஒரு முடிவுக்கு வராத—தற்கால நிலையில் ஐயரவர்களின் மன நிலையைத் தெரிந்து கொள்ளாது அதிருப்தியான உணர்ச்சி நாட்டில் பரப்பிவிடப் பெற்றதற்கு வருந்தாதிருக்க முடிய வில்லை. ஐயரவர்கள் சீரிய ஒழுக்க முள்ளவர்கள், பெரிய படிப்பாளி, தேசத்துக்காக அரிய தியாகம் செய்த பெரியார் என்பதை யாவரும் ஒத்துக் கொள்ளுகிறார்கள். அத் தகையோர்களால் நாட்டிற்கு மாசற்ற நன்மைகள் தானே எய்துதல் கூடும். காரியம் சீர்பெற அமைக்கப்பெறுமுன்னர்—காரியம் அரைகுறையாக இருக்கும்போது—காரியம் நிகழ்த்துவோரின் மன நிலையைத் தெரிந்துகொள்ளாது அபிப்பிராயங்கூறுவது மாறான உணர்ச்சியை ஜனங்களினிடையே பரப்புதலாகுமல்லவா? ஐயரவர்கள் முறையான திருத்தங் கண்டு ஜாதிபேதமென்ற களையை வேரோடுபிடுங்கி யெறிய முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இதனைச் சாக்குப் போக்கான வீண்காலம் கடத்துகிறார்கள் என நினைத்தல் தவறாகும். வெகு சமீபத்தில், அதாவது பெல்காமில் கூட விருக்கிற தேசிய மகா சபை கூடி முடிந்த இரண்டு மாதங்களுக்குள், குருகுலத்தில் பேதமற்ற நடை முறைகளையும் நிர்வாக சம்பந்தமான (கமிட்டி) கூட்டம் முதலிய சீர் திருத்தங்களையும் ஏற்படுத்திவிடுதல் கூடுமென ஸ்ரீ ஐயரவர்கள் சொன்னார்கள். அதன்படி நடந்து குருகுலமானது தேசமக்களின் பரிபூரண ஆதரவைப் பெற்று விடுமென உறுதியாக நம்புகிறேன்.

தமிழ் குருகுலம் தழைத்தோங்குக. வந்தேமாதரம்.

## மதிப்புரை.

ஸ்ரீராஜ ராஜேசுவரி மாலை:— யாவையும் இயக்குகின்ற பராசக்தியின் பல திருநாமங்களி லொன்றைப்பற்றி பக்திச் சுவையும் பொருட் சுவையும் நிறைந்து படிப்போர்க்கு இன்பம்பயக்கும் நூறு வெண்பாக்களாலாகிய இச்சிறு நூல் சென்னை திருவல்லிக்கேணி இந்து உயர்தர பாடசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராய ஸ்ரீமத் திரு. ராகவாசாரியாரவர்களால் இயற்றப்பெற்றதாகும். இதன் விலை அணா இரண்டு. ஆக்கியோரிடத்தில் பெற்றுக்கொள்ளலாகும்.

உதயணன் கதை:—'பெருங்கதை' என வழங்கும் உதயணன் கதை வடமொழியினின்றும் [illegible] சுருக்கியும் பெருக்கியும [illegible] வெளியிடப்பட்டுள்ள [illegible] எத்தனை விதமாக [illegible] இதன்சுவை [illegible], இப்போது வெளி[illegible] இச்சிறு புத்தகமும் [illegible] தாங்கியே எழுத[illegible] இதனையியற்றியோர் 'இ[illegible]' முதலிய பல நூல்களை எழுதி[illegible] இருக்கும் ஸ்ரீமத் வா. சு. [illegible] ஐயரவர்களாவர். இதன் விலை அணா [illegible]. வேண்டுவோர் சென்னை மயிலாப்பூர் நியூஸ்ரீட் [illegible] இலக்கமுள்ள வீட்டில் ஆக்கியோரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

மங்கையர்க்கரசி:—பாண்டி நாட்டின் கண் சைவப்பயிர் தழைத்தோங்கும் பொருட்டு ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானை மதுரைமாம்பதிக்குஎழுந்தருளுவித்துத் திருவிளையாடல் புரிவித்தமங்கையர்க்கரசியாரது சரித்திரத்தைஆதியோடந்தமாக இனிய செந்தமிழ் நடையில் ஸ்ரீமான் மா. துரைசாமி முதலியாரவர்கள் எழுதி வெளியிட்டுள்ளார்கள். இச்சிறு புத்தகம் மாணவர் கரத்திலன்றி ஒவ்வொரு புத்தகசாலையிலும் இருக்கவேண்டிய அவசியமாகும். இதன் விலை அணா [illegible]. சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்ரமண்யம் கம்பெனியாரிடம் கிடைக்கும்.

Literary Speculations:—காரைக்குடி வாசியான ஸ்ரீமான் வீர. முத்துக்கருப்பன் செட்டியாரவர்கள் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டுள்ள இச்சிறு நூல் பிரதியொன்று நமது பார்வைக்கு அனுப்பப் பெற்றிருக்கிறது. ஸ்ரீமான் செட்டியாரவர்கள் ஆங்கிலம் பயின்று அம்மொழியின் சொன்னயத்தையும் இலக்கியச் சுவையையும் நன்கு தருவியாராய்ந்து தாம் துய்த்த இன்பத்தை ஏனையோரும் துய்க்க வேண்டுமென்னும் அவா மேலீட்டால் இச்சிறு முயற்சியிலீடுபட்டவராவர். இச்சிறு நூலை வாசிப்பவருக்கு ஆங்கில மொழியில் சிரத்தையுடன் பயிலும் ஒரு இந்தியர் எவ்வளவு தூரம் தேர்ச்சி யடையக்கூடுமென்பது நன்கு விளங்கும். இதன் விலை அணா ஆறு. ஆக்கியோரிடத்தில் கிடைக்கும்.




### குமரன் வாரப்பதிப்பு.

சந்தா விபரம்.

வருஷ சந்தா உள்

| | |
|---|---|
| நாட்டுக்கு | ரூ ௪-0-0 |
| வெளி நாடுகட்கு | ரூ ௫-0-0 |

விளம்பர விகிதம்.

மாதம் ௧-க்கு பத்தி

| | |
|---|---|
| ௧-க்கு | ரூ. ௨0-0-0 |
| ஷை அரைக்கு | ரூ. ௧௧-0-0 |

### குமரன் மாதப்பதிப்பு.

சந்தா விபரம்

| | |
|---|---|
| உள்நாட்டுக்கு வருஷசந்தா | ரூ ௩-0-0 |
| வெளி நாடுகட்கு | ரூ ௩-௮-0 |
| தனிப்பிரதி | ரூ 0-௪-0 |

சித்திரைமாத முதலே கணக்கு வைக்கப்படும்.

மானேஜர்,
குமரன் ஆபீஸ், காரைக்குடி.

சொ. முருகப்ப செட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

